கார்ன் ப்ராடக்ட்ஸ்
# பக்குவமுறை*போட்டியில்
பங்குகொண்டு பரிசு பெறுங்கள்

## உங்கள் சொந்தப் பக்குவ முறையைச் சிறப்பிப்பவை

# பிரவுன் & போல்ஸன் மற்றும்




தயாரிப்பு வகைகள்






**ரெக்ஸ் ஜெல்லி கிரிஸ்டல்**

ஆறு இனிய பழச் சுவைகள். விரைவிலே எளிதாகத் தயாரிக்கலாம். குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை யாவரும் விரும்பக் கூடியது.






**ரெக்ஸ் பேகிங் பவுடர்**

தின் பண்டங்களை மென்மையாக்க சிறிதே சேர்த்தால் போதும். கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப்ஜாமுன் தயாரிக்க உபயோகியுங்கள்.



**பி & பி கஸ்டர்டு பவுடர்**

மென்மையான செழுமையுடன் இனிமையானது. முட்டை கலவாதது. புடிங், ஐஸ் க்ரீம், கீர், ட்ரைபின் தயாரிக்க ஏற்றது. ஜெல்லி மற்றும் புரூட் ஸாலெட்டுடன் பரிமாறும் போது சுவை கூட்டுகிறது.









**பி & பி வெரைட்டி கஸ்டர்டு பவுடர்**

ஆறு சுவைகள். புட்டிங்குகள், பழ உணவுகள் தயாரிக்க உகந்தது.






**பி & பி ஃப்ளேவர்டு கார்ன் ஃப்ளவர்**

ஐந்து சுவைகள். இனிமை யான ஹல்வாக்கள் தயாரிக்க பாலோடு மென்மையாகக் கலக்கலாம்.






**பி & பி பேடென்ட் கார்ன் ஃப்ளவர்**

சூப்புகளையும், இறைச்சிக் குழம்பையும் இறுக்கமாக்குகிறது. காரசாரமான கபாப், சமோசா, பட்டீஸ் தயாரிப்பதில் மாவுடன் சேர்க்கச் சிறந்தது. குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் மிகவும் நல்லது.

* மேலே கண்ட தயாரிப்புகளில் ஒன்றை உபயோகித்து உங்கள் சொந்தமான பக்குவ முறையை எங்களுக்கு அனுப்புங்கள். ஏற்றுக் கொள்ளப் படுபவை இப் பக்கங்களில் பிரசுரிக்கப்படுவதுடன், ரூ. 150 ரொக்கப் பரிசும் இதர வெகுமதியும் உங்களுக்குக் கிடைக்கும்.

உங்கள் பக்குவமுறையை அனுப்பவேண்டிய முகவரி :-



"பப்ளிஸிடி டிபார்ட்மெண்ட்,"
**கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) லிமிடெட்,**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், வாடபி ரோடு, பம்பாய்-1 பி ஆர்.

*Bensons/3129 TM*

பூரண விற்பனை ஏஜண்டுகள் : பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், சென்னை-1
மற்றும் அதன் கிளைக் காரியாலயங்களும்



# விஜிபி

# சுலபத் தவணைத் திட்டம்

விஜிபியில் சகாயமான விலையில் தரமுள்ள பொருள்களை வாங்குவது அனைவருக்கும் திருப்தியளிக்கிறது.
யாவரும் விஜிபி தவணைத் திட்டத்தில் பொருள்கள் வாங்குவது மிகச் சுலபம்.



விஜிபி சுலபத் தவணைத் திட்டம் இப்பொழுது விஜிபி 'மொபைல் விற்பனை வேன்கள்' மூலம் உங்கள் வீடு தேடி வருகிறது.



## வி.ஜி. பன்னீர்தாஸ் & கோ.

சைதாப்பேட்டை, சென்னை-15. போன் : 442333
கிளை : தி. நகர், சென்னை-17. போன் : 440246




தரமிகு பொருள்களின்
சிறப்புமிகு விற்பனையாளர்கள்

NAS.98 TH.A

சௌமிய, ஐப்பசி 10 :: 1969, அக்டோபர் 26



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# கல்கி
## பொருளடக்கம்



## எல்லை காந்தி என்னும் எல்லையற்ற அன்பு

**நா**ட்டில் சூதும் வாதும் பெருகிப் பயங்கரமான அவமானகர வகுப்புக் கலவரமும் மூண்ட சமயத்தில் உண்மைக்கும் ஒற்றுமைக்கும் உருவாகத் திகழும் எல்லை காந்தியாகிய கான் அப்துல் காஃபர் கான் அவர்கள் வருகை தந்திருக்கிறார்கள். அதருமம் ஓங்கும்போதே தரும சக்தி தோன்றும் என்ற உண்மைக்கு இதுவும் ஒரு சான்று போல் உள்ளது.

காந்தி நூற்றாண்டு விழாவுக்காக வந்த விசேஷ அதிதி எல்லை காந்தி. அதிதிகளுக்கு விருந்துபசாரம் அளிப்பது நம் பண்பு. ஆனால் எல்லை காந்தியோ நம் நாட்டில் வந்தவுடன் மூன்று தினங்கள் உண்ணாவிரதம் இருக்க வேண்டியதாயிற்று. நம்முடைய மனக் கோணலை நிமிர்த்தவே அந்தப் பெரியார் இத்தண்டனையை ஏற்றார். எல்லை காந்தி மனம் திறந்து பேசி வருகிறார். நம் நாட்டில் காந்தியம் எவ்வளவு தூரம் அழிந்து விட்டது என்பதை மனமுடைந்து எடுத்துக் காட்டிவிட்டார். 'இங்கு எங்கும் காந்திஜியின் சுவட்டைக் காண முடியவில்லையே' என்று வேதனையுடன் கூறுகிறார். 'நாங்கள் உங்களிடமே அந்தப் புருஷோத்தமனை, சத்திய சந்தனை, ஒற்றுமையுருவான காந்திஜியைக் காண்கிறோம். நாங்கள் மறந்துவிட்ட வழியை மீண்டும் எங்களுக்குக் காட்டிக் கை கொடுங்கள்' என அவரைக் கேட்டுக் கொள்கிறோம்.

போர் ஆவேசத்துக்குப் பெயர் எடுத்த பட்டாணியர்களையே அமைதிப் பட்டாளமாக, ஆண்டவனின் தொண்டர்களாகப் புனர்ஜன்மம் எடுக்கச் செய்த எல்லையற்ற அன்புச் சக்தியே எல்லை காந்தி. அந்த அன்பின் ஒளியில், நம் நாட்டில் கிளர்ந்துள்ள இருட்படலம் நீங்கி காந்திய ஜோதி மீண்டும் பரவுமாக !





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 29 ★ இதழ் 13

# தார்மிக மறுமலர்ச்சி தேவை

“கல்கி”யில் இப்போது பிரசுரமாகிவரும் “ரகுபதி ராகவ” தொடர் பல ஆண்டுகளுக்கு முன் நான் தமிழில் மொழிபெயர்த்தது. மக்கள் பொய்யையும், கெட்ட எண்ணத்தையும் தவிர்த்து, சத்தியத்தையும் அன்பையும் கடைப்பிடிக்க வேண்டும் என்ற மகத்தான கனவு கண்டவர் காந்திஜி. அந்தக் கனவு நனவாவதற்குத் துணை புரிய வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் காந்தி அடிகள் எழுதியவற்றைத் தமிழாக்கினேன். இப்பொழுது பிரசுரிப்பதற்காக இக் கட்டுரைகளை ஒழுங்கு படுத்துகையில் எனக்குத் துக்கம் மேலிடுகிறது. காந்திஜி மேற்கொண்டது புனிதமான திருப்பணி. இந்தியாவை விரைவில் ஆலைத் தொழில் மயமாக்க வேண்டும் என்ற பேராசையின் காரணமாக அப்புனிதப் பணி தோற்றுவிட்டது. நாட்டின் வறுமைக்கு முடிவு கட்டுவது தான் ஆலைத் தொழில் முறையைப் பரப்புவதன் நோக்கம் என்று கூறப்பட்டது. ஆனால் இந்த நோக்கம் பலனளிக்கவில்லை. பலனளிக்கும் என்ற எண்ணத்தில் இந்திய சர்க்கார் எடுத்த தவறான நடவடிக்கைகள் தோற்றுவிட்டன.

மக்களின் தார்மிக மறுமலர்ச்சிக்கு காந்திஜி செய்த முயற்சி பலிக்காமல் போய்விட்டது. அதுமட்டுமல்ல. ஐம்பதாண்டுகளுக்கு முன் இருந்ததை விட இவ்வகையில் இன்று நாம் மோசமான நிலையில் இருக்கிறோம். தவறான சிந்தனைப் போக்கின்மீது தேசத்தைத் தொழில் மயமாக்குவதற்குப் போட்ட அவசரத் திட்டங்கள்தான் இதற்குக் காரணம். தொழில் மயமாக்குவதில் நம் பேராசையும் அவசரமும் குறைவாக இருந்து, சத்தியம் அன்பு ஆகியவை குறித்துத் தேச பிதாவிடம் நாம் காட்டும் விசுவாசம் அதிகமாக இருப்பின் எவ்வளவு பெருமைக்குரியதாக இருக்கும்! தேசத்தை அதி வேகமாகத் தொழில் மயமாக்கும் திட்டத்தை மிதமிஞ்சி வலியுறுத்தியதன் விளைவாக, இப்போது நாம் இழந்துவிட்ட நன்னெறிச் செல்வத்தை மீட்கவே முடியாதோ என்னும்படியான நிலைமை ஏற்பட்டுவிட்டது.

முன்பு தேச விடுதலைக்கான அரசியல் போராட்டமும், ஒழுக்கம் உயருவதற்கான தார்மிகப் போராட்டமும் ஒரே பெரு முயற்சியில் ஒன்றாக இணைந்திருந்தன. இதில் தேச விடுதலை என்ற நோக்கமானது தார்மிக லட்சியத்தை விட முக்கியமாகி, தரும நோக்கத்தைத் தாழ்த்தி விட்டது. ஆயுதம் தாங்கிக் கலகம் செய்யாமல் சுதந்திரத்தை அடைந்தோம். இது ஈடு இணையற்ற வரலாற்றுச் சாதனை. ஆனால் ஒழுக்கம் உயருவதற்கான போராட்டத்தில் நாம் படுதோல்வி அடைந்து விட்டோம். விடியற்காலையில் காணும் கனவின் தெளிவற்ற நினைவு போல, காந்திஜியின் சத்திய — அஹிம்சை உபதேசங்கள் இன்று நம்மிடையே எஞ்சி இருக்கின்றன.

தேசம் தொழில் மயமாக வேண்டுமென்றால், பர்மிட்டுகளும் லைசென்ஸ்களும் இருந்தே தீரவேண்டும் என்ற பிரமை டெல்லியில் பெரிய அதிகாரிகளிடம் இன்னும் இருந்து வருகிறது. அதிலிருந்து அவர்களை விடுபடச் செய்வது எப்படி? இந்த அதிகாரங்கள் அரசுக்கு இல்லாமல் போனால் வானமே நம்மீது இடிந்து விழுந்துவிடும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். பெரிய அற்புதம் நிகழ்ந்தாலொழிய அவர்களது இந்த மனப்பான்மையை மாற்ற முடியுமென்று தோன்றவில்லை. தேசத்தில் நேர்மைக் குறைவும், தெய்வ உணர்வற்ற போக்கும் பரவியதற்கு ஒரு காரணம் பெர்மிட் — லைசென்ஸ் ஆட்சி முறையின் மூலம் சிருஷ்டிக்கப்படும் ஏகபோகங்களே. இவற்றின் மூலம் சிலருக்குப் பெரிய வருமானங்கள் கிடைக்கின்றன. நாட்டில் ‘தெய்வம் உண்டு’ என்ற உணர்வு இல்லாமற் போனதற்கும்,

ஒழுக்கம் கெட்டு வருவதற்கும் காரணம், சிறிய வியாபாரிகளும்கூட மக்களைத் திருப்தி செய்வித்துப் பொருளீட்டுவதற்குப் பதிலாகச் சர்க்காரின் தயவையே நாடி நிற்கின்ற நிர்ப்பந்த நிலைமைதான். அறவழி மீண்டும் ஏற்றம் காண வேண்டும் என நாம் விரும்பினால் அதிகாரிகளோ கட்சித் தலைவர்களோ அளிக்கக் கூடிய 'தயவு'களினின்று தொழில்களை விடுவித்தாக வேண்டும்.

ஆண்டவன் திருவுள்ளம் வைத்தால் நன்மை நிகழக்கூடும்; காந்திஜி நம்பி விரும்பியபடி நாம் எழுச்சி பெறுவது இன்னமும் சாத்தியமாகலாம். நல்லவர்கள் அனைவரும் இதற்காகவே பிரார்த்திக்கட்டும். காங்கிரஸில் தற்போது நிகழ்ந்து வரும் அருவருப்பான சண்டைகளே, ஒருகால் மக்களிடையே ஒரு பெரிய அறப் புரட்சி ஏற்படுவதற்கு முன்னோடியாக இருந்தாலும் இருக்கலாம். அல்லது இந்த அறப் புரட்சி இவ்வளவு விரைவில் ஏற்படாமல் போனாலும் போகலாம். அவ்வாறாயின் ஆண்டவன் அருளுக்காகப் பொறுமையுடன் நாம் காத்திருக்க வேண்டியதுதான்.

**('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)**

# ராஜாஜியின் கருத்துக்கள்

காங்கிரஸின் அதிகாரக் கோஷ்டிகள் தீவிர இடதுசாரியாகிற விளையாட்டில் ஒன்றோடொன்று போட்டியிட்டு வருகின்றன. இந்த விளையாட்டினால் நம் தேசத்தின் துரதிருஷ்டசாலிகளான மக்களுக்கு எவ்வளவு விபரீதம் ஏற்படும் என்பது வெளிப்படை.

காங்கிரஸ் தலைவர்கள் தம்மிடம் வைக்கப்பட்ட நம்பிக்கைக்கு முற்றிலும் மாறாக நடந்து வருவதைக் காணத் துயரமாக இருக்கிறது. ஸ்ரீ சவானைப் பற்றி மிக உயர்வாக எண்ணி நம்பிக்கை வைத்திருந்தோம். ஆனால் இவரைப் போன்ற ஒரு பலவீனமான, செயலூக்கமற்ற உள்துறை மந்திரியை இதுவரை இந்தியா கண்டதில்லை என்னும் விதத்தில் அவர் நடந்து வருகிறார். தேசம் எங்கிலும் குழப்பமும் வன்முறையும் பரவி வருகையில் அவர் இப்படி யிருக்கிறார்.

ஸ்ரீ சவான் விஷயம் மோசமானது எனில் ஸ்ரீ எஸ். கே. பாட்டீல் விஷயம் அதனிலும் மோசமாக உள்ளது. காங்கிரஸுக்குப் பணம் திரட்டுவதிலேயே கவலை காட்டுகிறவராக இருக்கிறார் ஸ்ரீ பாட்டீல். ''நன்கொடை'' வசூலிப்பில் காங்கிரஸ் பாட்டீலைச் சார்ந்துள்ளது. பாட்டீல் காங்கிரஸைச் சார்ந்திருக்கிறார். இதற்கு ஒரு பெரிய நீர்த் தேக்கம் போல் உதவுவதே பெர்மிட் — லைசென்ஸ் ராஜ்யம்.

★

''ஒரு நொடியில் பணம் பண்ண விரும்பினால் தமிழ் நாடு லாட்டரிச் சீட்டுக்களை வாங்குவீர்'' என்று சமீபத்தில் ஒரு தினப் பத்திரிகையில் வெளியான அரசாங்க விளம்பரத்தில் கொட்டை எழுத்துக்களில் பார்த்தேன். அசத்தியம் ஒன்றை இதைவிட உகந்த விதத்தில் வெளியிட முடியுமா என எண்ணினேன். ''சத்தியத்தைச் சொல்ல வேண்டுமாயின், வேலையே செய்யாமல் பணம் பண்ணுவதில் உங்களுக்குக் கோடியில் ஒரு வாய்ப்புக் கிட்ட வேண்டுமாயின் லாட்டரிச் சீட்டு வாங்கிப் பாருங்கள்'' என்றே வாசகம் இருக்க வேண்டும். ஓர் அரசாங்கம் இவ்விதத்தில் மக்களைத் தூண்டுவது மிக மிக ஆட்சேபகரமானது.

அரசாங்க லாட்டரிகள் சட்டப்படி செல்லத்தக்கவையா என்பதை முடிவுகட்ட ஸுப்ரீம் கோர்ட்டில் ஒரு முயற்சி செய்யப்பட்டது. இது செல்லத் தக்கதே என்று பம்பாய் ஹைகோர்ட் கூறிய தீர்ப்பை எதிர்த்து அப்பீல் செய்வதற்கு ஸுப்ரீம் கோர்ட்டில் அநுமதி கோரப்பட்டது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக ஸுப்ரீம் கோர்ட் அநுமதி வழங்க மறுத்துவிட்டது. லாட்டரியால் மனுதார் தனிப்பட்ட முறையில் பாதிக்கப்படவில்லை என்று ஸுப்ரீம் கோர்ட் கருதுவதாகவும் எனவே இவ்விஷயத்தை அநுமதிக்காததாகவும் கூறப்பட்டது. அரசாங்கம் சட்ட விரோதமாக அதிகாரம் எடுத்துக்கொண்டு லாட்டரி நடத்துவதால் எந்தத் தனி மனிதரும் தனிப்பட்ட முறையில் பாதிக்கப்படவில்லை என்பது உண்மையே. ஆனால் இதனால் தேசம் முழுதும் பாதிக்கப்பட்டிருக்கிறது.

'லாட்டரி நடத்துவதும் ஒரு வியாபாரமே; எனவே அதில் அரசாங்கங்களுக்கு அதிகாரம் உண்டு' என்று ராஜ்ய சர்க்கார்கள் உரிமை பாராட்டுகின்றன. லாட்டரியும் மற்ற வியா



பாரங்களைப் போன்றது என்பது எவ்வளவு அபத்தம் என்பது வியக்தமாகக் காண்கிறோம். இவ்விஷயத்தை ஸுப்ரீம் கோர்ட் பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டு முடிவு காணாதது பரிதாபம். அரசியல் சாஸன ஷெட்யூலில் வெளிப்படக் கூறியுள்ள ஷரத்துக்களிலிருந்து ராஜ்ய சர்க்கார்கள் சட்டப்படி லாட்டரி நடத்த முடியாது என்று தெளிவாகத் தெரிகிறது. இந்திய சர்க்கார்—அதாவது நமது ராஷ்டிரபதி — இவ்விஷயத்தை ஸுப்ரீம் கோர்ட்டின் பரிசீலனைக்குக் கொணர்ந்து முடிவு காண வேண்டும்.

★

மதுவிலக்கை ரத்து செய்வதற்கு மக்களின் சுதந்திரத்தை ஒரு காரணமாகக் காட்டினர். போதையூட்டும் பானங்களில் ஊட்டச் சக்தி இருப்பதாக இன்னொரு காரணம் காட்டினர். இந்தக் காரணங்கள் தள்ளுபடியானாலும் இன்னொரு காரணம் காட்டப்படுகிறது. சர்க்காருக்கு மது விற்பனையால் கிடைக்கின்ற வருமானமே இக்காரணம்.

சர்க்காருக்குப் ப்த்துப் பதினைந்து கோடி ரூபாய் வேண்டுமெனில் -- ஐம்பது கோடியே வேண்டுமாயினும் கூட — இந்தத் தொகையை எவ்வளவு பரவலாக மக்கள்மீது வரியாக விதிக்க முடியுமோ, அவ்விதத்தில் வசூலிப்பதுதான் யுக்தம். ஒருசில ஏழைகளிடம் மட்டும் தங்கள் துன்பத்தை (மெய்யாகவோ அல்லது கற்பனையாகவோ) மறப்பதற்காகப் போதைப் பொருட்களை நாடுமாறு சபலம் காட்டி, இதனால் சர்க்காருக்குத் தேவைப்படும் நிதி முழுவதையும் பெறப் பார்ப்பது முறையல்ல. மது என்பது அதை அருந்துவோரின் ஆரோக்கியத்தைப் பாதிப்பது; சமூகத்துக்கும் உபத்திரவம் விளைவிப்பது; மதுக்கடைகளால் ஒரிரு அதிருஷ்டசாலிகளே லாபம் பெறுவர் — இப்படிப்பட்ட ஓர் இனத்திலிருந்து பெறும் வருமானத்தால் அரசாங்கத்தை நடத்துவதும் நல்லதல்ல; விவேகமல்ல; ஸோஷலிஸமும் அல்ல.

★

காந்திஜியின் ஜனன நூற்றாண்டுக்கு மிகவும் தொடர்புள்ள மகத்தான சம்பவம் மகாபாரதத்தில் உள்ளது. பாரத யுத்தத்தைப் பாடிய மகான் வியாஸர், பேராசை என்பது போருக்கு இழுத்துச் செல்வதையும், போர் என்பது அதுகாறும் மீறப்படாதிருந்த நியதிகளை மீறுமாறு செய்வதையும் விவரிக்கிறார். பறவைகளின் இறக்கை போல் இந்தத் தரும நியதிகளே மக்களின் ஆன்மா உலகிலிருந்து — வெறும் லௌகிகத்திலிருந்து—உயரக் கிளம்புவதற்கு உதவி புரிபவை. குருக்ஷேத்திர யுத்தத்தில் பரம உத்தமர்களும் உயர்ந்த சத்திய நிலையிலிருந்து கீழே விழுந்தனர். சிறிய மனிதர்களின் தவறுகள் நமக்கு எதையும் போதிப்பதில்லை. ஆனால் பெரியோரின் குற்றங்கள் நம்முன் ஆழப் பதிகின்றன. சத்தியாத்மாவான யுதிஷ்டிரன், தேவர்களுக்கும் பிரியமான யுதிஷ்டிரன் அந்த நிலையிலிருந்து கீழே விழுந்தான். வெல்ல முடியாத துரோணரின் மனத்தைக் கலக்கி அவரை ஜயிக்கும் உத்தேசத்தில் யுதிஷ்டிரன் பொய் பேசினான். தனக்குக் கற்பிக்கப்பட்டபடி ஒரு பொய்யை அவன் கூறியவுடன், அதுகாறும் பூமிக்கு ஒரு சாண் உயரத்தில் சென்று கொண்டிருந்த அவனது ரதத்தின் சக்கரங்கள் மண்ணைத் தொட்டுவிட்டன. மாசுபடாத அவனது உதடுகளிலிருந்து வெட்கத்துடன் பொய் வார்த்தை வெளிப்பட்டவுடன் தேர்ச் சக்கரங்கள் பூமிக்கு இறங்கிவிட்டன. அதன் பின் உலகைவிட உயர்ந்த நிலையில் அவனது ரதத்தை வைத்திருக்கத் தருமத்தால் முடியவில்லை.

துயருற்ற யுதிஷ்டிரனுக்காக நமது சுதந்திர பிதாவின் நூற்றாண்டில் பிராயசித்தத் தவம் புரிவோம். நமது தேசத்தின் சக்கரங்களை உயரத் தூக்கிப் பிடிப்போம். வியாஸரின் வழிவந்தவர்கள் வாழ்வதற்குரிய இடமாகப் பாரதத்தை ஆக்குவோம்.




★

எல். ஐ. ஸி.யின் பிரீமியம் விகிதங்கள் குறைக்கப்பட மாட்டா என்ற செய்தியில் ஆச்சரியம் எதுவும் இல்லை. அரசாங்க உடைமையாக்குவதால் மக்களுக்கு ஒரு போதும் அனுகூலம் ஏற்படாது. அரசுடைமையில் சிப்பந்திகள் அதிகமாவர். ஆனால் இதனால் வேலை குறையாது. மாறாக சிப்பந்திகள் அதிகமாக ஆக வேலையும் அதிகம் ஆகும். அதற்காக மேலும் சிப்பந்திகள் — இதனால் மேலும் வேலை பெருகுவது — என்றிப்படி 'பார்க்கின்ஸன் விதி' நடைமுறையாகும். இவர்களுக்குச் சம்பளம் கொடுக்கப் பணம் திரட்டுவதில்தான் ஸ்தாபனத்தின் அக்கறை இருக்கும். சுதந்திரமாகத் தொழில் நடைபெற்றுப் போட்டி இருக்கும்போதுதான் மக்களுக்கு அனுகூலம் ஏற்படும்.



# பொன்னியின் செல்வன்

அமரர் **கல்கி**

## இரண்டாம் அத்தியாயம்

## மோக வலை

**வ**யது முதிர்ந்த பிறகு இளம் பெண்களை மணந்து கொள்வோர் எப்போதும் சந்தேகம் என்னும் மாயா உலகத்தில் வாழ்கிறார்கள். அவர்களுக்கு அன்னியர்கள் யாரைக் கண்டாலும் இயற்கையான அருவருப்பு ஏற்படுகிறது. பழுவேட்டரையருக்கு இத்தகைய அருவருப்பு ஏற்பட அதிக காரணம் இருந்தது. நந்தினி தமக்கு முன்னால் வந்து நின்று பேசத் தொடங்கியதை அவர் சிறிதும் விரும்பவில்லை. அதே சமயத்தில் நந்தினியைக் கடிந்து கொள்ளவும் அவரால் முடியவில்லை.

எனவே நந்தினி கேட்ட கேள்விக்கு மறுமொழியாக, ''ராணி! இந்த உலகத்தில் நமக்குத் தெரியாதவர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். எல்லாரையும் நாம் பார்த்து அறிந்திருக்க முடியாதல்லவா? அதனால் நமக்கு நஷ்டமும் இல்லை!'' என்றார்.

இதைக் கேட்ட பார்த்திபேந்திரன், ''ஐயா! சோழ நாட்டின் பொக்கிஷ மன்னரின் பட்டமகிஷிக்கு என்னைத் தெரியாததினால் நஷ்டம் ஒன்றுமில்லை; நஷ்டம் எனக்குத்தான். ஆகையால் என்னை நானே தெரிவித்துக் கொள்ளுகிறேன். அம்மணி! என்னைப் பார்த்திபேந்திரப் பல்லவன் என்று அழைப்பார்கள்!'' என்று சொன்னான்.

''ஓ! அப்படியா? தங்கள் பெயரை நான் கேள்விப்பட்டிருக்கிறேன்!'' என்றாள் நந்தினி.

''பார்த்திபேந்திரா! ஏன் விருதுகளை விட்டு விட்டுப் பெயரை மட்டும் சொல்லிக்கொண்டாய்? இவ்வளவு தன்னடக்கமும் பணிவும் எப்போது ஏற்பட்டன? நந்தினி! இவன் வெறும் பார்த்திபேந்திரன் அல்ல. வெங்கியும் கலிங்கமும் வென்று வீரபாண்டியன் தலைகொண்ட பார்த்திபேந்திரப் பல்லவன்!'' என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கூறினார்.

**ந**ந்தினியின் முகம் ஒரு கண நேரம் புயல் குமுறும் வானத்தைப் போல் இருண்டது. அவளுடைய இரு கண்களிலிருந்தும் இரு மின்னல்கள் தோன்றி ஒளி வீசி உடனே மறைந்தன. அடுத்த கணம் அவள் கலகலவென்று சிரித்தாள்.

''ஐயா! 'வீர பாண்டியன் தலைகொண்ட' பெருமையான பட்டத்தை எத்தனை பேர் சூட்டிக் கொள்கிறார்கள்! அதற்கு ஏதேனும் கணக்கு உண்டா ?'' என்று கேட்டாள்.

''அம்மணி! தனாதிகாரி என் பேரில் உள்ள அபிமானத்தினால் அவ்விதம் கூறினார். உண்மையில் அந்த விருதுக்கு நான் உரியவன் அல்ல. வீரபாண்டியன் தலைகொண்ட பெருமை ஆதித்த கரிகாலர் ஒருவருக்கே உரியது !''

''அது ஏன் அப்பா, அவ்விதம் சொல்கிறாய்? செத்த பாம்பை அடித்த பெருமையில் உனக்குக் கொஞ்சமும் பங்கு வேண்டாமா?'' என்று பழுவேட்டரையர் பரிகாசக் குரலில் கேட்டுவிட்டுக் குறுஞ் சிரிப்புச் சிரித்தார்.

''இல்லை, அரசே! இல்லை! ஆதித்த கரிகாலர் செத்த பாம்பைக் கொல்லவில்லை. அவர் வாளை ஓங்கியபோது வீரபாண்டியன் முழு உயிர் உள்ள

பாம்பாகத்தான் இருந்தான். அவன் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தேவலோகத்து மோகினியை ஒத்த ஒரு மங்கை முன்னால் வந்து நின்று கை கூப்பிக் கெஞ்சினாள். வாளை ஓங்கியவன் நானாக இருந்திருந்தால் உடனே அவ் வாளைத் தூர வீசி எறிந்திருப்பேன்; வீரபாண்டியன் பிழைத்துப் போயிருப்பான்!'' என்று பார்த்திபேந்திரன் பழுவேட்டரையருக்குப் பதில் சொன்னான். ஆனால் அவனுடைய கண்களோ நந்தினியின் முகத்தைக் கூர்ந்து நோக்கின.

நந்தினி, பேச்சு அபாயகரமாகப் போய்க்கொண்டிருப்பதை உணர்ந்தாள். பழுவேட்டரையரைத் திரும்பிப் பார்த்து, ''நாதா! அந்தப் பழைய கதை இப்போது எதற்கு? இவர் இங்கு வந்த காரியம் என்னவென்று விசாரிக்கலாமே!'' என்றாள்.

உடனே பழுவேட்டரையரும், ''ஆம், தம்பி! பழைய கதை வேண்டாம்! உன் கதையைச் சொல்! காஞ்சியிலிருந்து எப்போது புறப்பட்டாய்? எங்கே பிரயாணம்? இங்கு இறங்கி வந்த காரணம் என்ன?'' என்று கேட்டார்.

நந்தினியைப் பார்த்ததால் மதிமயங்கிப் போயிருந்த பார்த்திபேந்திரனும் தான் வந்த காரியத்தை நினைவுகூர்ந்தான்.

''ஐயா! என்னை மன்னிக்க வேண்டும்! ஏதேதோ பேசிக் கொண்டிருந்து விட்டேன். மிக முக்கியமான செய்தியுடன் வந்திருக்கிறேன். சோழ நாட்டையே துயரக் கடலில் மூழ்கச் செய்யக்கூடிய பயங்கரமான செய்தி. ஈழத்திலிருந்து என்னுடன் இந்தக் கப்பலில் புறப்பட்டு வந்த இளவரசர் அருள்மொழி வர்மர் சுழற்காற்று அடித்த சமயம் கடலில் குதித்துவிட்டார். அவருடைய கதி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை. ஒருவேளை இங்கே வந்து ஒதுங்கினாரோ என்று பார்ப்பதற்கு வந்தேன்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

அவன் கூறி முடிப்பதற்குள், ''ஆகா! என்ன சொன்னாய்?'' என்று பழுவேட்டரையர் அலறினார். சுழற் காற்றினால் வேருடன் பறிக்கப்பட்ட நெடுமரத்தைப் போல் தரையில் வீழ்ந்தார்.

அவரைத் தாங்கி எடுப்பதற்காகப் பார்த்திபேந்திரன் பாய்ந்து சென்றான். நந்தினி குறுக்கே நின்று அவன் நீட்டிய கையைப் பற்றி அகற்றினாள். பழுவேட்டரையரின் அருகில் தான் உட்கார்ந்து அவருடைய தலையைத் தன் மடியின்மீது எடுத்து வைத்துக் கொண்டாள். ''தண்ணீர்! தண்ணீர்!'' என்று கத்தினாள்.

கூடாரத்திலிருந்து சேடிப் பெண் தண்ணீர் எடுத்துக் கொண்டு வந்தாள். இன்னும் சில வீரர்களும் கலங்கரை விளக்கக் காவலரும் அவர் குடும்பத்தாரும் ஓடி வந்தார்கள். நந்தினி மிக்க கம்பீரத்துடன் அவர்களையெல்லாம் அப்பால் நிற்கும்படி ஏவினாள். பழுவேட்டரையரின் முகத்தில் தண்ணீர் தெளித்தாள். ''நாதா! நாதா!'' என்று கொஞ்சும் குரலில் அழைத்தாள். சில நிமிஷங்களுக்கெல்லாம் கிழவரின் கண்கள் திறந்தன. உடனே நினைவும் வந்தது. சட்டென்று எழுந்து உட்கார்ந்தார்.

''நந்தினி! சற்று முன் என் காதில் விழுந்தது உண்மையா? இந்தப் பல்லவன் என்ன சொன்னான்? பொன்னியின் செல்வனைக் கடல் கொண்டு விட்டதாகச் சொன்னான் அல்லவா? அந்த வீர குமாரன் சின்னஞ்சிறு குழந்தையாயிருந்தபோது இந்தக் கைகளால் அவனைத் தூக்கித் தோளில் வைத்துக் கொண்டு மகிழ்ந்தேன். இதே கைகளினால்தான் அவனைச் சிறைப் பிடித்துக் கொண்டு வரும்படியான கட்டளையில் முத்திரை வைத்தேன். ஐயோ! சோழ நாடு என்னைப் பற்றி என்ன நினைக்கும்? தமிழகம் என்ன நினைக்கும்?''



என்று பழுவேட்டரையர் தலையில் அடித்துக் கொண்டார். வைரம் பாய்ந்த அந்த வீரக் கிழவர் அவ்விதம் மனம் கலங்கிப் புலம்பியதை அது வரையில் நந்தினி பார்த்ததில்லை; யாருமே கண்டதில்லை.

''நாதா! பதறுகிறீர்கள்! இவர் இன்னும் செய்தி முழுவதும் சொல்லவில்லையே! முழுதும் கேட்டுவிட்டு மேலே செய்ய வேண்டியதைப் பற்றி யோசிப்பது நலம் அல்லவா?'' என்றாள் நந்தினி.

''ஆமாம்; நீ சொல்வது சரிதான். பார்த்திபேந்திரா! சீக்கிரம் சொல்! பொன்னியின் செல்வர் கடலில் முழுகி இறந்து விட்டார் என்று சொன்னாய் அல்லவா? அது உண்மையா? அல்லது ஏதோ துர்நோக்கத்துடன் கற்பனை செய்து சொல்கிறாயா? பசித்திருக்கும் புலியுடன் விளையாடாதே! ஜாக்கிரதை!'' என்று அக்கிழவர் கண்களில் கனல் எழும் படி நோக்கிக் கர்ஜித்தார்.

''ஐயா! மன்னிக்க வேண்டும்! இளவரசர் இறந்து விட்டார் என்று நான் சொல்லவில்லை. அவ்வளவு பயங்கரமான நஷ்டம் இத் தமிழகத்துக்கு ஏற்பட்டிருக்கும் என்று என்னாலும் நம்ப முடியவில்லை. சுழற் காற்று உக்கிர நிலையை அடைந்திருந்தபோது அவர் என் கப்பலிலிருந்து கடலில் குதித்தார் என்றுதான் சொன்னேன். கடவுள் அருளால் ஒரு வேளை பிழைத்திருக்கலாம். இந்தக் கடற்கரையிலே வந்து ஒதுங்கி யிருக்கலாம். அந்த ஆசையுடனேதான் பார்ப்பதற்கு இங்கே வந்தேன்....''

''சுழற் காற்று அடித்தபோது கடலில் குதித்தாரா? எதற்காக? ஏன் குதித்தார்? உன்னுடைய கப்பலில் அவர் ஏன் ஏறினார்? அவர் குதித்தபோது நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?'' என்று பழுவூர் அரசர் படபடப்புடன் கேட்டார்.

நந்தினி குறுக்கிட்டு, ''ஐயா! இவர் இலங்கைக்கு எதற்குப் போனார் என்பதி



★

நரையில் விழுந்த பழுவேட்டரையரின் தலையைத் தன் மடிமீது எடுத்து வைத்துக் கொண்டாள் நந்தினி. ''தண்ணீர்! தண்ணீர்!'' என்று கத்தினாள்.

★

லிருந்து விவரமாகச் சொல்லட்டும்!'' என்றான்.

''ஆமாம்; உள்ளது உள்ளபடியே சொல்லு! உண்மையைச் சொல்லா விட்டால் நீ உயிருடன் தப்ப முடியாது! உன்னை....'' என்று பழுவேட்டரையர் பற்களை நற நற வென்று கடித்தார்.

''அரசே! உண்மையைத் தவிர வேறு எதுவும் சொல்லி எனக்குப் பழக்கம் இல்லை. நான் பொய் சொல்ல நினைத் தாலும் என் நாக்குச் சொல்லாது. கேளுங்கள்! தாங்களும் கடம்பூர்ச் சம்பு வரையரும் மற்றும் பலரும் சோழ குலத் துக்கு விரோதமாகச் சதி செய்கிறீர்கள் என்று காஞ்சி நகருக்குச் செய்தி எட்டியது....''

''பொய்! பொய்! முற்றிலும் பொய்!''

''செய்தி பொய்யா யிருக்கட்டும்! அதுவே நான் வேண்டுவது. காஞ்சிக்கு எட்டிய செய்தியையே நான் கூறினேன். அதன் பேரில் திருக்கோவலூர் மலைய மானும் ஆதித்த கரிகாலரும் என்னை ஈழத்துக்கு அனுப்பினார்கள். அருள் மொழிவர்மரைக் கையோடு அழைத்து வரும்படி அனுப்பினார்கள்....''

இவ்வாறு ஆரம்பித்துப் பார்த்திபேந் திரன் தான் இலங்கை சேர்ந்தது முதல் நடந்ததையெல்லாம் தான் அறிந்த வரையில் விவரமாகக் கூறினான்.

கதை முடிந்ததும் பழுவேட்டரையர், ''கடவுளே! சோழ நாட்டுக்குப் பெருங் கேடு வந்து விட்டது! இந்தப் பாவியினால்தான் வந்தது! இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி நான் அல்லவோ கட்டளை போட்டேன்? நான் அல்லவோ மரக்கலங்களை அனுப்பி னேன்?'' என்று கதறினார்.

''அரசே! தங்கள் குற்றம் ஒன்றும் இல்லை. தாங்கள் கட்டளை பிறப்பித் திரா விட்டாலும் இந்த மனிதருடைய கப்பலில் இளவரசர் ஏறிக் காஞ்சிக்குப் பயணமாயிருப்பார் அல்லவா? வீணாக நொந்து கொள்ள வேண்டாம். நம் முடைய செயல்களுக்கு மேலே விதியின் செயல் ஒன்று இருக்கிறது. மேலும்...''

நந்தினி இவ்விடத்தில் உரத்துப் பேசு வதைச் சட்டென்று நிறுத்திப் பழுவேட் டரையரின் காதோடு ஏதோ சொன்னாள்.

பழுவேட்டரையரின் முகம் சிறிது மலர்ச்சி அடைந்தது. ''ஆமாம்; ஆமாம்! அது எனக்குத் தோன்றாமல் போயிற்று!'' என்றார்.

பிறகு பார்த்திபேந்திரனைப் பார்த்து, ''பல்லவா! உன் கப்பலுக்குப் போய் நான் பரிசோதித்துவிட்டு வரப் போகி றேன். அது வரை நீ இங்கேயே இருக்க வேண்டும். தப்பிச் செல்ல முயல வேண்டாம். ஓட முயற்சி செய்தால் உடனே வேல் எறிந்து கொல்லும்படி என் வீரர்களுக்குக் கட்டளையிட்டு விட்டுப் போகிறேன். ஜாக்கிரதை! முதுகிலே காயத்துடன் சாகாதே! உன் பரம்பரை, வீர பரம் பரை!'' என்றார்.

''வந்தனம், ஐயா! தப்பித்து ஓடும் எண்ணமே எனக்குக் கிடை யாது. அத்தகைய எண்ணமிருந்தால் உங்கள் வீரர்கள் யாராலும் தடுக்க முடியாது. முதுகிலே காயம் பட்டுக் கொள்ளும் உத்தேசமும் எனக்கு இல்லை!'' என்றான் பல்லவன்.

''அரசே! இவரைப் பற்றித் தாங்கள் கவலைப்பட வேண்டாம். நானே பார்த் துக் கொள்கிறேன். தப்பியோடப் பார்த்தால் இதோ இந்தக் கத்தி உடனே இவர் மார்பில் பாயும்! நீங்கள் நிம்மதியாய்ப் போய்க் கப்பலைச் சோதித்துவிட்டு வாருங்கள். மாலுமி களையும் விசாரியுங்கள், இவர் கூறிய தெல்லாம் உண்மைதானா என்று.'' — இவ்விதம் நந்தினி கூறிக் கொண்டே இடுப்பிலிருந்து ஒரு சிறிய கத்தியை எடுத்தாள்.

''ராணி! உனக்கு ஏன் இந்தப் பொறுப்பு? நீ கூடாரத்துக்குள்போயிரு! அல்லது தியாக விடங்கரின் வீட்டில் போய் இரு. இவனை நம் வீரர்களே கவ னித்துக் கொள்வார்கள். அல்லது இவனையும் நான் என்னோடு கப்ப லுக்கு அழைத்துப் போகிறேன்....''

''நான் வரவில்லை, ஐயா! நான் தங்க ளுடன் வந்தால் தங்களுக்கு மறுபடியும் சந்தேகமாகத்தானிருக்கும். மாலுமிகள் எனக்காகச் சாட்சி சொல்லி விட்டதாய் நினைப்பீர்கள். நான் இவ்விடத்தை விட்டு நகர மாட்டேன். தாங்கள் கவலையின்றிப் போய் வாருங்கள்!''

''நாதா! தாங்கள் கப்பலிலிருந்து திரும்பி வரும் வரையில் நானும் இங் கேயேதான் இருக்கப் போகிறேன். இங் கிருந்தபடி தங்களைப் பார்த்துக் கொண்டே இருப்பேன்!'' என்றாள் நந்தினி.

பிறகு பழுவேட்டரையரின் காதோடு ''இவன் இங்கே ஏதேனும் துப்பறிய வந்திருக்கிறானோ, என்னமோ, யார் கண்டது? மேலும் இளவரசரைப் பற்றிய செய்தி தாங்கள் திரும்பி வரும் வரையில் யாருக்கும் தெரியக் கூடாது'' என்றாள்.

பழுவேட்டரையர் தலையை அசைத்து விட்டுப் படகில் ஏறினார். படகு மரக் கலத்தை நோக்கிச் சென்றது.

படகு சிறிது தூரம் போகும் வரையில் நந்தினி படகையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதே சமயத்தில் பார்த்திபேந்திரன் கண் கொட்டாமல் தன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்ததை அவள் உணர்ந்தாள். சட்டென்று அவன் பக்கம் திரும்பினாள். பார்த்திபேந்திரன் வெட்கித் தலை குனிவான் என்று எதிர்பார்த்தாள். ஆனால் தேன் மலரைப் பார்த்து விட்ட வண்டு அப்பால் திரும்புமா ?

நந்தினி கூரிய சிறிய கத்தியை எடுத்து மறுபடியும் காட்டி, ''ஜாக்கிரதை! தப்பி ஓடப் பார்க்க வேண்டாம்!'' என்றாள்.

''தேவி! கத்தியைக் காட்டிப் பயமுறுத்துவானேன்? தப்பியாவது? ஓடுவாவது? வலையில் அகப்பட்ட மீன் எவ்விதம் தப்பி ஓடும்? தாங்கள் விரித்த வலையில் அகப்பட்டு....''

''என்ன, ஐயா, சொல்கிறீர்? என்னை வலைஞர் குலப் பெண் என்று சொல்கிறீரா? இது பழுவூர் அரசர் காதில் விழுந்தால்....''

''அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை, தேவி! ஆனால் மீன் பிடிக்கும் வலையை நான் குறிப்பிடவும் இல்லை. தங்களுடைய சேல் விழிகள் விரிக்கும் மோக வலையைச் சொல்கிறேன்....''

''சீச்சீ! என்ன தைரியம் உமக்கு? வலைஞர் குலப் பெண் என்றாலும் பாதகமில்லை. ஆடவர்களுக்கு மோக வலை விரிக்கும் கணிகை என்று என்னைச் சொல்லுகிறீர் ?''

''மன்னிக்க வேண்டும் ! அப்படிப்பட்ட அபராதத்தையும் நான் செய்யவில்லை. தாங்கள் வேண்டும் என்று வலை விரிக்க வேண்டுமா, என்ன ? சிலந்திப் பூச்சி வலை நெய்வது ஈக்களைப் பிடிப்பதற்காகவா? அது தான் வசிப்பதற்காக வலை பின்னுகிறது. ஈக்கள் தாமாகப் போய் அவ்வலையில் விழுகின்றன....''

''என்னைச் சிலந்திப் பூச்சி என்று சொல்கிறீர் ? அவ்வளவு பயங்கரமாக இருக்கிறேனா நான் ?''

''தவறு! தவறு! நான் தீபத்தைச் சொல்லியிருக்க வேண்டும். தீபம் எரிவது விட்டில் பூச்சிகளுக்காக அல்ல. தீபம் எரிந்து தன்னைச் சுற்றிலும் ஒளி வீசி ஜோதி மயமாகச் செய்கிறது. அசட்டு விட்டில் பூச்சிகள் அதைக் கனி என்று நினைத்துக் கொண்டு சென்று விழுந்து மாய்கின்றன....''

''ஒரு சிறிய காற்று 'குப்' என்று அடித்தால் தீபம் அணைந்து விடுகிறது. வாயினால் ஊதிக்கூட அணைத்துவிடலாம். தீபத்தின் சக்திஅவ்வளவுதான்!''

''தீபம் அணைந்துவிடும்; ஆனால் பூரண சந்திரனை யார் அணைக்க முடியும் ? பூரண சந்திரன் சமுத்திர ராஜனுக்காக உதயமாகவில்லை. இயற்கை நியதியின் படி சந்திரன் உதயமாகிறது. அதன் குளிர்ந்த நிலா ஒளியை வானமும் பூமியும் மகிழும்படி பரப்புகிறது. ஆனால் பேதைக் கடலைப் பாருங்கள்! பூரண சந்திரனைக் கண்டு கடல் எதற்காக அப்படிக் கொந்தளிக்க வேண்டும்? எட்டாத பழத்துக்கு ஏன் கொட்டாவி விட்டுத் தவிக்க வேண்டும் ?''

''பல்லவ குல மன்னர்களின் கவிதா ரஸனையைப் பற்றியும் கற்பனைத் திறனைப் பற்றியும் ரொம்பவும் கேள்விப்பட்டிருக்கிறேன். அவை யெல்லாம் உண்மை யென்பதாக இப்போதுதான் உணர்கிறேன்.''

''புராணங்களிலும் காவியங்களிலும் நான் படித்ததையும் கேட்டதையும் நேற்று வரை நம்பவில்லை; இன்றைக்குத் தான் எனக்கு நம்பிக்கை பிறக்கிறது.''

''எதைப் பற்றிச் சொல்கிறீர்?''

''பெண் உருவங் கொண்டவர்கள் சிலர் வானத்தையும் பூமியையும் தங்கள் காலடியில் போட்டுக் கொள்ளும் சக்தி பெற்றவர்கள் என்று கேட்டிருக்கிறேன். பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுத்த அசுரர்கள் அமுத பானம் செய்ய வேண்டிய சமயத்தில் மோகினியினால் ஏமாந்து போனார்கள். சுந்தோபசுந்தர்கள் ஒரு பெண் நிமித்தமாக அடித்துக் கொண்டு செத்தார்கள். மேனகையினால் விசுவாமித்திரர் தவம் கெட்டது. கோவலன் மாதவியின் மோக வலையில் விழுந்து கிடந்தான். தசரதர் கைகேயிக்காக இராமனைக் காட்டுக்கு அனுப்பினார். எகிப்து நாட்டு ராணியின் காரணமாக மகத்தான ரோம சாம்ராஜ்யம் அழியத் தொடங்கியது....''

''போதும், ஐயா! போதும்! இந்த உதாரணங்களை யெல்லாம் எதற்காகச் சொல்கிறீர் ?''

''தெரியவில்லையா, தேவி! யாருக்கு உதாரணமாகச் சொல்கிறேன் என்று உண்மையாகவே தெரியவில்லையா?''

''எனக்கு உதாரணமாகச் சொல்கிறதாயிருந்தால், அதைப்போல் பெரிய தவறு நீர் செய்ய முடியாது.''

''தவறு ஒன்றுமில்லை. அவர்களுடைய சக்தியைக் காட்டிலும் தங்கள் சக்தி குறைந்தது அன்று.''

''உம்முடைய வாய் மொழியே உமக்கு விரோதமாயிருக்கிறது.''

''எப்படி தேவி !''

''பழுவூர் அரசரை நான் வேண்டுமென்றுதான் கப்பலுக்கு அனுப்பி

னேன். உம்மிடம் ஒரு விஷயத்தைப் பற்றிக் கேட்பதற்காக.''

''தங்கள் நோக்கத்தைத் தெரிந்து கொண்டுதான் நானும் அவருடன் போகாமல் இங்கேயே தங்கினேன்.''

''வீர பாண்டியனை ஒரு பெண் காப்பாற்ற முயன்றாள் என்றும் ஆதித்த கரிகாலர் அதைப் பொருட்படுத்தவில்லை என்றும் நீர் சொன்னீர் அல்லவா ?''

''ஆம், சொன்னேன்.''

''காப்பாற்ற முயன்ற பேதைப் பெண் யார் என்று தெரியுமா ?''

''இப்போது பழுவூர் அரண்மனையின் ஜோதியாக விளங்கும் இளையராணி நந்தினி தேவிதான்.''

''நீர் சற்றுமுன் வர்ணித்தபடி எனக்கு அவ்வளவு சக்தி இருந்திருந்தால் நான் காப்பாற்ற விரும்பிய ஒரு மனிதரின் உயிரைக் காப்பாற்றியிருக்க மாட்டேனா ? அது ஏன் என்னால் முடியாமற் போயிற்று ?''

''இரத்த வெறி கொண்டிருந்த ஆதித்த கரிகாலர் அச்சமயம் தங்கள் விருப்பத்தை நிறைவேற்றி வைக்கவில்லைதான். ஆனால் அதற்குப் பிறகு மூன்றரை வருஷங்களாக அவர் எத்தகைய சித்திரவதையை அநுபவித்து வருகிறார் என்பதை நான் அறிவேன்.''

''உமக்கு எப்படித் தெரியும், ஐயா ! உம்மிடம் சொன்னாரா ?''

''மூன்று வருஷங்களாய் மனத்திலேயே வைத்துக் கொண்டு கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தார். அவருடைய உள்ளத்தை ஏதோ ஒரு துன்பம் அரித்துக் கொண்டிருக்கிறது என்பதை மட்டும் அறிந்திருந்தேன். பத்து நாளைக்கு முன்பு, நான் ஈழத்துக்குப் புறப்பட்டதற்கு முதல் நாள்தான், — மனத்தைத் திறந்து என்னிடம் சொன்னார். அது முதல்....''

''அது முதல் என்ன?''

''பழுவூர் இளைய ராணியைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என் மனத்திலும் குடிகொண்டு விட்டது !''

''ஆதித்த கரிகாலரின் நிலையில் நீர் இருந்திருந்தால் நான் கேட்டுக்கொண்டதற்காக வீர பாண்டியரை உயிரோடு விட்டிருப்பீர் என்று சொன்னது நினைவிருக்கிறதா ?''

''நன்றாக நினைவிருக்கிறது.''

''அது உண்மைதானா ?''

''சத்தியம், தேவி! தாங்கள் சோதித்துப் பார்க்கலாம்.''

''ஐயா! என் மனத்தில் ஒரு சந்தேகம் இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?''

''தங்கள் தங்கக் குரலில் எதைச் சொன்னாலும் என் செவிகள் இன்பம் அடையும்; உள்ளம் பூரிக்கும்.''

''நீர் என்னைச் சோதிப்பதற்காகவே இப்படிப் பேசுகிறீர் என்று சந்தேகிக்கிறேன். நான் விரிக்கும் மோக வலையைப் பற்றிப் பேசி நீர் எனக்கு வலை விரிக்கப் பார்க்கிறீர். என்னுடைய அந்தரங்கத்தை அறிந்து கொள்ள முயல்கிறீர்.''

பார்த்திபேந்திரன் திடுக்கிட்டுப் போனான். அவன் பேச ஆரம்பித்தபோது அந்த எண்ணத்தோடுதான் ஆரம்பித்தான். பிறகு அதை மறந்தே விட்டான். கபடமாக ஆரம்பித்த பேச்சு அவனை மோகக் கடலில் உண்மையாகவே தள்ளி விட்டது. முதலில் அப்படி எண்ணியது குறித்து அவன் வெட்கப்பட்டான். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், ''தேவி! அவ்விதம் தங்களைச் சோதித்து ஒற்றன் வேலை செய்ய நான் பிரயத்தனப்படும் பட்சத்தில் என் தலையில் இடி விழட்டும் !'' என்றான்.

''ஐயோ! அப்படிச் சொல்லாதீர்!'' என்று நந்தினி அலறினாள்.

''ஏன், தேவி ! ஏன் ?''

''உங்கள் பெரிய இளவரசரிடமிருந்து வந்தவன் இன்னொருவன் — அவன் பெயர் என்ன?....''

''வந்தியத்தேவனா ?''

''ஆம், அவன்தான்! என்னிடம் மிகத் தந்திரமாக ஒற்று அறிந்து போக முயன்றான். தாங்கள் சொல்வதைப் பார்த்தால் அவன் தலையில் இடி விழுந்தே விட்டது போலிருக்கிறதே!''

''துரதிருஷ்ட வசமாக அவன் தலையில் இடி விழவில்லையே? அவன் நின்ற கப்பலில் அல்லவா விழுந்தது? அதனால் அவனுக்கு வந்த ஆபத்து சின்ன இளவரசரையும் அல்லவா பீடித்து விட்டது ?''

''பாவம்! பழையாறை இளைய பிராட்டியை நினைத்தால் எனக்குப் பரிதாபமாயிருக்கிறது. அவள் இந்த உலகில் மிகவும் பிரியம் வைத்திருந்த இருவர் ஏக காலத்தில் மாண்டு போனார்கள்! என்ன துர்திருஷ்டம்?''

''தேவி! இரண்டுபேர்கள் யார்?''

''நீர் சொன்ன இரண்டு பேரும் தான்! இளையபிராட்டிக்குத் தம்பியின் மீது தனிவாஞ்சை உண்டு அல்லவா?''

''அது உலகம் அறிந்தது. அவளுடைய பிரியத்துக்குப் பாத்திரமான இன்னொருவர்....?''

''ஏன்? உங்கள் பெரிய இளவரசர் அனுப்பிய தூதன்தான்.''

''வந்தியத்தேவனையா சொல்லுகிறீர்கள்?''

''அவனைத்தான்!''

''சீச்சீ! சோழ சாம்ராஜ்யத்தையே ஆட்டுவிக்கும் சக்தி வாய்ந்த பழையாறை இளைய பிராட்டி அற்பனும், தற்பெருமைக்காரனும், அதிகப்பிரசங்கியுமான அந்த வாலிபன் மீது...''

''ஆம்; அந்த வாலிபன் மீது மோகம் கொண்டாள். அதனாலேதான் அவனைப் பழுவேட்டரையரின் தண்டனையிலிருந்து தப்புவிப்பதற்காக ஓலை கொடுத்து இலங்கைக்கு அனுப்பினாள். பாவம் இந்தக் கிழவர் இளவரசரின் துர்க்கதிக்குத் தாம் காரணம் என்று துடியாய்த் துடிக்கிறார். உண்மையில் அதற்கு இளைய பிராட்டிதான் காரணம். அவள்மட்டும் ஓலை கொடுத்து அனுப்பாதிருந்தால்...''

''உண்மை, உண்மை! இந்த விபரீதம் எல்லாம் ஏற்பட்டிராது.''

''என் கணவர் கப்பலிலிருந்து திரும்பி வந்ததும் இந்த உண்மையை அவருக்கு நீர் எடுத்துச் சொல்ல வேண்டும். சொன்னால் என்னுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆவீர்!''

''அம்மணி! தங்களுடைய நன்றிக்குப் பாத்திரம் ஆக இது ஒன்றுதானா வழி? வேறு எனக்குத் தாங்கள் இடக் கூடிய பணிகள் இல்லையா?''

''ஐயா! ஒரு பேதைப் பெண்ணின் நன்றிக்குப் பாத்திரமாக எத்தனையோ நூறு வழிகள் உண்டு.''

''அவற்றில் இன்னும் இரண்டொன்றைச் சொல்லுங்கள். ஆதித்த கரிகாலருக்கு அப்படிப்பட்ட சந்தர்ப்பம் ஒன்று கிடைத்தது. அதை அவர் கைசோர விட்டு விட்டார். விட்டு விட்டு அப்புறம் இரவு பகலாகத் துடி துடிக்கிறார். நான் ஒருநாளும் அத்தகைய தவறைச் செய்ய மாட்டேன்!''

''இது சத்தியமா, ஐயா? ஒரு பெண்ணின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக அவள் எது சொன்னாலும் செய்யக் கூடிய மனிதரா நீங்கள்?''

''எந்தப் பெண் என்பதைப் பொறுத்தது தேவி! நேற்றுவரைக்கும் நான் பார்த்திருக்கும் எந்தப் பெண்ணின் விருப்பத்துக்காகவும் எதுவும் செய்திருக்க மாட்டேன். சொன்னால் சிரித்திருப்பேன். இன்று அப்படியல்ல. தாங்கள் சொல்லிப் பாருங்கள். எனக்கு நூறு உயிர்கள் இருந்தால் அவ்வளவையும் தங்களுடைய விருப்பத்தை நிறைவேற்றுவதற்கு அர்ப்பணம் செய்வேன். ஆயிரம் சாம்ராஜ்யங்கள் என் வசம் இருந்தால் அவ்வளவையும் தங்கள் விருப்பத்துக்காகத் தியாகம் செய்வேன். இகத்தையும் பரத்தையும் என்றென்றைக்கும் இழக்கும்படி சொன்னால் அதற்கும் சித்தமாயிருப்பேன். கொடிய பகைவர்களை மன்னிக்கச் சொன்னால் மன்னிப்பேன். அத்யந்த நண்பர்களின் தலையைக் கொண்டு வந்து தங்கள் காலடியில் போடச் சொன்னால் போட்டு விட்டு மறு காரியம் பார்ப்பேன்....''

இவ்விதம் பார்த்திபேந்திரன் வெறி கொண்டவனைப் போல் கூறியபோது அவனுடைய உடம்பு தலையிலிருந்து கால் வரையில் நடுங்கியது; அவனுடைய வாயிலிருந்து வந்த சொற்கள் குழறின; உதடுகள் துடித்தன; பற்கள் கடித்தன; ரோமங்கள் குத்திட்டு நின்றன; மூச்சு விடும் சத்தம் கொல்லன் உலைச் சத்தத்தைப் போல் கேட்டது.

பார்த்திபேந்திரனுடைய இந்த மாறுதல் நேயர்களுக்கு வியப்பை அளிக்கும். ஏன்! அவனிடமே ''நீ இப்படி ஆவாய்'' என்று முதல் நாள் யாராவது சொல்லியிருந்தால் அவன் நம்பியிருக்க மாட்டான். பிற்காலத்தில் நினைத்துப் பார்த்தால் அவனுக்கே கூட வியப்பளிக்கக் கூடிய காரியம்தான்.

ஆனால் இது ஒரு பார்த்திபேந்திரனைப் பற்றிய அதிசயம் மட்டும் அல்ல; மனித இயற்கை பற்றிய இரகசியம்.

வாழ்நாளெல்லாம் பழி பாவங்களில் முழுகிக் கிடந்தவர்கள் திடீரென்று ஒரு நாள் வைராக்கிய சீலர்களாகிறார்கள். பக்தி பரவசமடைந்து ஆடிப் பாடுகிறார்கள்; இறைவன் கருணைக்குப் பாத்திரமாகிறார்கள்; மனித சமூகத்துக்கு ஒப்பற்ற தொண்டுகளும் புரிகிறார்கள்.

இதற்கு மாறாக நெடுங்காலமாய்த் தூய்மையான களங்கமற்ற வாழ்க்கை நடத்தியவர்கள் திடீரென்று ஒருநாள் வழுக்கி விழுகிறார்கள். அப்படி விழும் போது அதள பாதாளத்திலேயே விழுந்து விடுகிறார்கள்.

எத்தனையோ மேதாவிகள் காலமெல்லாம் ஆராய்ச்சி செய்த பின்னரும் மனித உடம்பின் அமைப்பு இரகசியத்தை நம்மால் முழுதும் அறிந்து கொள்ள முடியவில்லை. மனித இதயத்தின் அமைப்பு இரகசியத்தை நாம் எவ்வாறு அறிந்து கொள்ள முடியும்?

பார்த்திபேந்திரனுடைய ஆவேச மொழிகளைக் கேட்டு வந்த நந்தினி, ''போதும், ஐயா, போதும்! நிறுத்துங்கள்! அவ்வளவு பயங்கரமான காரியம் எதையும் செய்யும்படி தங்களை ஒரு நாளும் நான் வற்புறுத்தப்போவதில்லை. தங்களுக்கும் எனக்கும் உகந்த சந்தோஷமான ஒரு காரியத்தைத்தான் சொல்லப் போகிறேன்'' என்றாள்.

(தொடரும்)



இவள்தான் ஸாரா. பிறக்கும்போதே குறைந்த எடையோடு பிறந்த குழந்தை. வேறொரு குழந்தை உணவு அருந்திக் கொண்டிருந்த இவள் இப்பொழுது அமுல்ஸ்ப்ரே சாப்பிட்டு வருகிறாள்.

# இப்பொழுது அவளைப்பாருங்கள்!

"அவள் எடை கூடி இருக்கிறது. அமுல்ஸ்ப்ரே தொடங்கியதிலிருந்து அவள் வளர்ச்சி அபாரம்" என்கிறார்; 15 மாதக் குழந்தையான ஸாராவின் தந்தை திரு. ஸைரஸ் கஸ்தர்.






உங்கள் குழந்தை முதலாண்டிலே வெகு வேகமாக வளருகிறது — இக்காலத்திற்குள், அது பிறந்தபோது இருந்த எடை மும்மடங்காக வேண்டும். எனவேதான் உங்கள் குழந்தையின் உடல் வளர உதவும் புரத சத்தை அதிகமாகக் கொண்டிருக்கிறது அமுல்ஸ்ப்ரே. குழந்தை உணவுகள் தயாரிக்க அமெரிக்காவில் உபயோகிக்கப் படும் உன்னதமான ஸ்ப்ரே–ட்ரையிங் செய் முறையினால் ஆக்கம் பெற்றது அது. பாலிலுள்ள புரதத்தின் தரம் குறையாமல் இருப்பதற்காக, ஸ்ப்ரே—ட்ரையிங் செய்முறையில், குறைந்த வெப்பத்தில் பால் பதனமாக்கப் படுகிறது. அமுல்ஸ்ப்ரே ஒரு சீரான சரி விகித உணவு. அதில் விடமின்கள், கார்போஹைட்ரேட்டுகள், தாதுப் பொருள்கள்—ஏன், உங்கள் குழந்தை வேகமாகவும் ஆரோக்கியமாகவும் வளருவதற்குத் தேவையான அனைத்தையுமே கொண்டது அது.

ஆயிரக்கணக்கான தாய்மார்கள், தங்கள் குழந்தைகள் பிறந்த முதல் வாரத்திலிருந்தே அவற்றிற்குத் தாய்ப் பாலுக்குப் பதிலாகவோ அல்லது உபரி உணவாகவோ அமுல்ஸ்ப்ரே புகட்டி வருகிறார்கள். அதனால்தான், தயாரிக்கத் தொடங்கிய இரண்டு ஆண்டுகளுக்குள்ளாகவே அமுல்ஸ்ப்ரே இந்தியாவிலேயே உச்ச விற்பனையுள்ள குழந்தை உணவாகிவிட்டது.

## அமுல்ஸ்ப்ரே

தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புகட்டச் சிறந்தது!

# மின் சைக்கிள்



**நடுத்தர வர்க்கத்தினர் வரவேற்கக்கூடிய ஒரு வாகனம்!**




**ப**ஸ்ஸுக்காகக் காத்திருந்து கண்கள் பூத்துப் போய் விட்டன. கார் வாங்குவதென்பது நடுத்தர மக்களின் கற்பனைக்கும் எட்டாத விஷயம். ஒரு மோட்டார் சைக்கிளாவது வாங்கிவிட முடிகிறதா? விலை ரூபாய் நாலாயிரத்துக்கு மேல் போகிறதே?

''கவலைப்படாதீர்கள்! இதோ இருக்கிறது, 'மைபோனி'! மின்சக்தியில் ஓடுகிறது. செலவு குறைவு. வண்டியின் விலை ரூ. 1500 தான்!'' என்று கூறுகிறார், திரு பழனியாண்டி.

பார்த்தால் சின்ன ஸ்கூட்டர்போல் இருக்கிறதல்லவா? ஆனால் இது ஒரு சாதாரண சைக்கிள்தான். ஒரு வித்தியாசம் — இது மின்சக்தியில் ஓடுகிறது. கால் வைக்குமிடத்தில் பொருத்தப்பட்டுள்ள ஜூகாஸ் பாட்டரி வண்டியை இயக்குகிறது. இந்தப் பாட்டரியை வீட்டிலேயே 'சார்ஜ்' செய்து விடலாம். கவரிலுள்ள பிளக் மூலம் இந்தப் பாட்டரிக்கு வேண்டிய மின் சக்தியைப் பெறலாம். இரவு படுக்கப் போகும்போது பாட்டரியை வீட்டில் உள்ள மின்சார மெயினில் இணைத்து விட்டால் போதும். காலையில் வண்டி ஓடுவதற்குத் தயாராகி விடுகிறது. இருபது அல்லது முப்பது மைல் ஒரே மூச்சில் ஓடும்.

மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர் இவைகளைக் கிளப்ப உதைக்க வேண்டியிருக்கிறதல்லவா? சில சமயங்களில் உதைத்து உதைத்துக் கால் வலியெடுத்து விடும்! இந்தப் புதிய கண்டுபிடிப்பு 'மைபோனி'யை 'ஸ்டார்ட்' செய்வது மிக எளிது. வலது கைப்பிடியருகிலுள்ள ஒரு பித்தானை அமுக்கினால் போதும். மணிக்கு இருபது, இருபத்தைந்து மைல் வேகத்தில் நிர்ப்பயமாக ஓட்டலாம். வண்டியின் உயர்ந்தபட்ச வேகம் மணிக்கு நாற்பது மைல். இதில் இன்னொரு விசேஷம் என்னவென்றால் மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர்களில் உள்ளது போல் 'கிளட்ச்' 'கியர்' ஆகிய தொந்தரவு ஏதுமில்லை. இந்த வண்டியில் ஒருவர் மட்டுமே சவாரி செய்ய இயலும்.

எப்போதாவது வண்டியில் ஏதாவது கோளாறு ஏற்பட்டுப் பாதி வழியில் நின்றுவிட்டால் என்ன செய்வது?

அதற்கும் ஏற்பாடு செய்திருக்கிறார் திரு பழனியாண்டி. பாதங்களை வைத்துக் கொள்ளும் இடத்தில், சாதாரண சைக்கிளுக்குப் பொருத்தப்படுவது போன்ற 'பெடல்'கள் இரண்டு தயாராக இருக்கின்றன. வண்டியில் ஏதாகிலும் பழுது ஏற்பட்டால், சாதாரண சைக்கிளை மிதித்துக் கொண்டு போவதுபோல் ஓட்டிச் செல்லலாம். இந்த வண்டியைத் தயாரிக்கத் தேவையான எல்லா உறுப்புக்களும் இந்தியாவிலேயே செய்யப்படுவதால் 'ஸ்பேர்' உறுப்புக்கள் கிடைப்பதும் சுலபமே.

'புதிய கண்டுபிடிப்புக்களை ஊக்குவிக்கும் நிறுவனம்' **(Inventions Promotion Trust)** திரு என். பழநியாண்டியைக் கௌரவ மானேஜிங் டிரஸ்டியாகக் கொண்டு செயல்பட்டு வருகிறது. பல புதிய கண்டுபிடிப்பாளர்கள் இங்கு வந்து பல சோதனைகள் நிகழ்த்துகின்றனர்.

''இன்னும் குறைந்த விலைக்கு இதனை விற்க இயலும். ஆனால் சர்க்காருக்கு இருநூறு, முந்நூறு ரூபாய் வரி கட்ட வேண்டுமே? பெருவாரியான மக்களுக்கு இந்த வண்டி பயன்பட வேண்டும் என்பதே என் அவா. இதன் 'பேடண்ட்' உரிமை என்னிடம் உள்ளது. இதனை வியாபார ரீதியில் தயாரிக்கும் உரிமையை எந்தத் தனி மனிதருக்கும் ஏகபோகமாக விற்றுவிட நான் தயாராயில்லை. மூன்று, நான்கு பேர்களுக்குப் பிரித்துக் கொடுக்க விரும்புகிறேன். அப்போதுதான் போட்டி இருக்கும். போட்டி இருந்தால்தான் குறைந்த விலையில் இது மக்களுக்குக் கிடைக்கும்'' என்கிறார் திரு பழநியாண்டி. பேட்டி: **'பாணன்'**

# ஸாயனமிட் மெலாதியான்

நிலக்கடலை, கரும்பு, பருத்தி, புகையிலை, காய்கறிகள், கனிகள் மற்றும் இதர பயிர்களை பெரும்பாலான புழுப் பூச்சிகள் பாழாக்காத வண்ணம் பாதுகாக்கிறது.

## புழுப் பூச்சிகளைக் கொல்லும்...

700க்கும் அதிகமான புழுப்பூச்சி வகைகள்—அதாவது சுமார் 100 வித பயிர்களையும் சேமிக்கப்பட்ட தானியங்கள், கால்நடைகள், வீட்டுப் பறவைகள் மற்றும் வளர்ப்புப் பிராணிகளையும் பாதிக்கும் புழுப்பூச்சி வகைகளை மலேதியான் கொன்றுவிடும். ஒரு துளி மலேதியான் ஆயிரக்கணக்கான பூச்சிகளைக் கொல்லுகிறது!

புழுப் பூச்சிகள் உங்கள் பயிர்களைப் பாழாக்காமல் பாதுகாக்க மலேதியான் பூச்சிகொல்லி மருந்துக் கலவைகளை எப்பொழுதும் உபயோகியுங்கள். இவை ஸாயனமிட் மலேதியான் டெக்னிகல் (ஐ.எஸ்.ஐ. சர்ட்டிபிகேட் எண் ஐ.எஸ். 1832)-லிருந்து தயாரிக்கப்படுவதால், தரத்திற்கு உத்தரவாதம் உண்டு!



## உங்களுக்குத் தீமையற்றது!...

மனிதர்களுக்கும், பயிர்கள், கால்நடைகள், வீட்டுப் பறவைகள் மற்றும் வளர்ப்புப் பிராணிகளுக்கு இது தீங்கு செய்யாது. இந்த மருந்தை கையாள தனிப்பட்ட உடைகளோ, முன்னெச்சரிக்கைகளோ தேவையில்லை. அறுவடையைத் தாமதிக்க வேண்டிய அவசியமில்லை.

**மெலாதியான் பூச்சிகொல்லி பொருள்கள் விற்பனையாளர்கள்.**












ஈ.ஐ.டி. பாரி லிமிடெட்.
த.பெ. எண் 12, சென்னை 1.




ஸாயனமிட் இந்தியா லிமிடெட் த.பெ.எண்.6577, பம்பாய் 18 WB

# ரகுபதி ராகவ

## மகாத்மா காந்தி

### தமிழாக்கம்: ராஜாஜி



4

சகல ஜீவன்களும் நானும் ஒன்று என்று உணர முயல்கிறேன். மனிதப் பிறப்பு மட்டுமல்ல, ஊர்ந்து செல்லும் புழுவின் உயிருடனும் ஒன்றுபட ஆசைப் படுகிறேன். ஊர்ந்து செல்லும் புழுக்களும் நானும் ஒரே பரம்பொருளினின்று உண்டானேம்—உயிரானது எந்த வடிவம் கொண்டு நின்றாலும் ஒன்றுதானே?

[யங் இந்தியா 4—4—29]

முக்திக்கு ஆசைப்படுகிறேன். பூரண விடுதலையை வைகுண்டத்தில்தான் நான் அடைய முடியும். அதை அடைவதற்கு உலகத்தை விட்டுக் காட்டுக்குப் போய்த் தவம் செய்ய வேண்டியதில்லை. மலைக் குகையில் வாசம் செய்ய வேண்டியதும் இல்லை. என் உள்ளத்திலேயே ஒரு குகை இருக்கிறது. அதை அறிந்தேனுல், அதிலே தனித்திருந்து தவம் செய்ய முடியும். மலைக் குகையில் இருப்பவனும் உலக நினைவுகளை மறந்து விடாமல், ஆகாயக் கோட்டைகள் கட்டி அநுபவித்துக் கொண்டு இருக்கலாம். அரண்மனையில் வசிப்பவனும்—ஜனகனைப் போன்ற ஒரு ராஜயோகி—எந்த மனக் கோட்டையிலாவது மோகத்திலாவது சிக்காமல் இருக்கலாம். மலைக் குகையில் உடலை மட்டும் வைத்து, மனத்தால் உலகம் எல்லாம் திரிந்து அலைவதும் உண்டு. அப்படித் திரிகிறவனுக்குச் சாந்தி இல்லை. ராஜ மாளிகையில் சகல வைபவங்களுக்கும் இடையில் ஜனகன் தன் உள்ளத்தைச் சாந்தி நிலையில் நிறுத்திக் கொண்டான். என்னைப் பொறுத்தமட்டில் முக்திக்கு நான் கண்ட வழி நாட்டுக்கு உழைத்து வருவதே ஆகும். இடையருத உழைப்பை நாட்டுக்குச் செலுத்தி அதன் மூலம் உலகத்துக்குப் பணியாற்றுவதே நான் கண்ட முக்தி மார்க்கம். உலகத்திலுள்ள உயிர்களோடு ஒன்றுபட்டுப் போவதே என் ஆசை.

[யங் இந்தியா 3—4—24]

காந்தியம் என்று ஒரு தனி மார்க்கம் இல்லை. என்னுடைய பெயரில் ஒரு தனி மார்க்கத்தை உண்டாக்கி விட்டுப் போக நான் விரும்பவில்லை. ஒரு புது சமயத்தையோ கொள்கையையோ நான் கண்டு உபதேசிக்கவுமில்லை. சாதாரணமாக இருந்து வந்த பெரியோர்கள் கண்ட பழைய உண்மைகளைத் தினசரி வாழ்க்கையிலும், செய்யும் காரியங்களிலும், செலுத்திப் பார்க்கலாம் என்பதுதான் என்னுடைய முயற்சி. சத்தியமும் ஜீவகாருண்யமும் புதிய விஷயங்கள் அல்ல. நம்முடைய ஆறுகளையும் மலைகளையும் போல் மிகப் பழைமையானதும், பழகி வந்ததுமான தத்துவங்கள். நான் புதிதாகச் செய்வது என்னவென்றால், இந்தப் பழைய தத்துவங்களை வைத்து என்னால் ஆன அளவு பிரயோகப் பரீட்சை விஸ்தாரமாகச் செய்து வருகிறேன். இவ்வளவே. இந்தப் பிரயோகத்தில் சில சமயம் தவறும் செய்திருக்கிறேன். தவறு செய்ததன் பயனைத் திருத்தம் அடைந்து அறிவும் பெற்றிருக்கிறேன். வாழ்க்கையும் தினசரி விவகாரங்களும் என்னைப் பொறுத்தமட்டில் சத்தியம் அஹிம்ஸை இந்தத் தத்துவங்களின் சோதனைக் களங்களாகி விட்டன. சத்தியம் அஹிம்ஸை இந்தக் கொள்கையில் எனக்குள்ள பக்தியானது உறுதியடைந்து வளர்ந்து வருகிறது.

[ஹரிஜன் 28—3—36]



# காமம் அல்லாத காமம்; கோபம் அல்லாத கோபம்

ரா. கணபதி

**வா**லிபன் நிமாயி வியாகரணம் முதலிய சாஸ்திரங்களில் கற்றுத் தேர்ந்து வடிவழகனாகவும், அறிவழகனாகவும் விளங்கினான். ஆனால் வித்யா கர்வமும், முன்கோபமும் இந்த அழகுகளை இருந்த இடம் தெரியாமல் விரட்டின.

நிலவைப் பிழிந்து செய்தாற் போன்ற திவ்ய ரூபம் வாய்த்ததால் 'கௌராங்கர்' என்றே அழைக்கப்பட்ட நிமாயி — வாய் நிறையத் தாம்பூலம் சிவக்க, கங்கைக் கரையில் தன் சக மாணவர்களுடன் அமர்ந்து வித்வான்களை எல்லாம் வாதப் போருக்கு அழைத்து மருட்டுவதும் வெருட்டுவதுமாக இருந்தான்.

இதனிடையில் அவனுக்கு எங்கே பொழுது அகப்பட்டது ஏழைப் பெண் லக்ஷ்மியைக் காண. அவளிடம் உள்ளத்தைப் பறி கொடுத்தான். கலியாணமான பின்னரேனும் பிள்ளை திருந்தக்கூடும் என்ற நம்பிக்கையில் அவனையும் லக்ஷ்மியையும் தம்பதியாக்கினாள் அவன் தாய் சசிதேவி.

அவள் எதிர்பார்த்தது வீண் போகவில்லை. ஏழை லக்ஷ்மியின் விநயமும், அன்புள்ளமும் 'நிமாயி பண்டிதரி'ன் இறுமாப்பையும் வறட்சியையும் ஓரளவு உருக்கின. பாமர மக்களுடனும் நேயமுடன் பழக ஆரம்பித்தார் நிமாயி.

லக்ஷ்மியின் குண விசேஷத்தால் நிமாயி தினந்தோறும் வீட்டுக்கு வேதியர்களை அழைத்து அன்னமிடலானார். இதற்குப் பொருள் வேண்டி இருந்ததால் கிழக்கு வங்காளத்துக்குச் சென்றார். அங்கு தமது வித்யா மகிமையால் நிறையப் பொருளீட்டி வீடு திரும்பினார்.

ஆனால் வீட்டிலே அதிதிகளை ஆவலுடன் அழைத்து உணவிடும் லக்ஷ்மி அவரை அன்புடன் வரவேற்கக் காணோம்.

நிமாயி வெளியூர் சென்றிருக்கையில் அவள் பாம்பு கடித்து மரித்து விட்டாள்.

அவர் பிரியப்பட்டுத்தான் லக்ஷ்மியை மணந்திருந்தார் எனினும், அன்புக்காக இதயத்தைக் கொடுக்கின்ற முதிர்ச்சி நிமாயிக்கு இன்னமும் ஏற்படவில்லை. லக்ஷ்மியின் பிரிவுத் துயரைச் சிறிது காலத்திலேயே மறந்துவிட்டுச் செல்வச் செழிப்புள்ள ராஜ பண்டித ஸநாதனரின் ஒரே புதல்வியான விஷ்ணுப் பிரியாவை இரண்டாம் தாரமாக மணந்தார்.

**த**ந்தைக்குச் சிராத்தம் செய்வதற்காகக் கயைக்குச் சென்றார் நிமாயி.

ஈசுவரபுரி என்ற மகானைக் கயையில் சந்தித்தார். அவர் நிமாயிக்கு ஸ்ரீ கோபால மந்திரத்தை உபதேசித்தார்.

அவ்வளவுதான், நிமாயி முற்றிலும் மாறி, கிருஷ்ண பக்தியில் பித்தராக ஆழ்ந்தார்.

'மந்திர உபதேசம் இப்படிக்கூட மாறுதலை உண்டு பண்ணுமா? இவ்வுலகில் எவ்வளவோ பேர் எத்தனை எத்தனையோ மகா மந்திரங்களில் உபதேசம் பெற்றும் பக்தசீலர்களாக மாறிவிடக் காணோமே!' என்று சிலர் ஐயுறலாம். பரம சூட்சுமம் வாய்ந்த மந்திர மகிமையை எடுத்துச் சொல்வது இயலாத காரியம். மந்திரங்களின் சக்தி மகத்தானது. மழை பெய்கிறது. மழை என்பது சர்வ சகஜமான நீர்தான். மழையில் நனைந்தால் நமக்கு ஜலதோஷமும் இருமலும் தான் உண்டாகின்றன. ஆனால் அதே மழை பூமிக்கடியில் ஊறி, அங்கு புதைந்துள்ள ஒரு வித்தைத் தொட்டவுடன், வித்து சிலிர்க்கிறது; தன் அகத்தைத் திறந்து கொள்கிறது; அதிலிருந்து மெல்லிய பசும் முளையை அலர்த்தி, நிலத்தை நிமிண்டிக் கொண்டு வெளியே தலைதூக்கி எட்டிப் பார்க்கிறது.

நிமாயி வித்துப் போல் கெட்டியாகத்தான் இருந்தார். அதில் அன்பு என்கிற உயிரோட்டம் கண்ணுக்கே தெரியாமல்தான் இருந்தது. ஆனால் கோபால மந்திரம் அந்த வித்திலிருந்து உயிர்மயமான பச்சை முளையைப் பிறப்பித்து விட்டது.

நவத்வீபம் திரும்பிய நிமாயி நவஜீவனத்தைத் தொட்டவராக இருந்தார். அவரது செருக்கு இருந்த இடம் தெரியாமல் அடியோடு அகன்று விட்டது. 'த்ருணாத் அபி ஸுநீசேன' — புல்லினும் அற்பமாகத் தன்னைக் கருதுவதை — குறிக்கோளாகக் கொண்ட உண்மையான வைஷ்ணவரானார்.

**மா**ணவர்களுக்கு அவர் பாடம் சொல்லி ஓய்ந்தபின், அவரை அவர்கள் ஏதோ புதிரைப் பார்ப்பது போலப் பார்த்தனர்.

"பண்டிட்ஜி, தாங்கள் இலக்கண பாடமே போதிக்கவில்லை. கிருஷ்ண மகிமையைத்தான் நாத் தழுதழுக்க, கண்கள் மல்க, உடல் புளகிக்க விவரித்துக் கொண்டிருந்தீர்கள்" என்றனர்.

நிமாயி சிரித்தார். "இலக்கணம், இலக்கியம் எல்லாம் அவன்தான். இன்றோடு வகுப்பு முடிந்தது. வேறு ஆசிரியரைத் தேடிப் போங்கள். கடைசியாக ஒரே ஒரு பாடம் சொல்லித் தருகிறேன். கடைசி விநாடியில் மனிதனைக் காப்பது அந்த ஒரு பாடம்தான். எங்கே திருப்பிச் சொல்லுங்கள்:

**"ஹரயே நம: க்ருஷ்ண யாதவாய நம:**
**கோபால கோவிந்த ராமஸ்ரீ மதுஸூதன"**

மாணவர்களின் கண்டங்கள் அனைத்தும் அதையே திருப்பிக் கோஷித்தன.

மாணவர் மட்டுமல்ல. நவத்வீப மக்கள் அனைவரின் கண்டங்களும் கண்டாமணியாக அந்த மணி நாமங்களை ஒலித்தன. அதோடு முப்பத்திரண்டு அட்சரம் பொருந்திய முக்தான மந்திரமும் நாவிலமெங்கும் பரவியது:

"ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண
க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே
ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே!"

கண்ணனின் கீர்த்தியை ஆவேசமான நாம சங்கீர்த்தனம் மூலம் பரப்பி நாடெங்கும் பக்தி கமழச் செய்தார் நிமாயி.

புல்லினும் அற்பமாகத் தம்மைக் கருதிய நிமாயி இப்போது அதற்கு முற்றிலும் மாறுபட்ட இன்னொரு நிலையில் இருந்தார். மெய்யடியார்களைக் கண்டக்கால், "கண்டேன் என் அடிமையை" என்று கோஷித்தபடி அவர்களது இதயத்தில் தம் பாதங்களை அழுந்த வைத்து ஆசி கூறலானார்.

'நகர சங்கீர்த்தனம்' என்ற பெயரில், பக்தர்களுடன் நிமாயி பரவசமாகப் பஜனை செய்து ஊர்வலம் வந்ததற்கு முஸ்லிம் காஜி தடை விதித்தார்.

விஷயத்தைக் கேள்வியுற்ற நிமாயி, கண்ணனை அன்பு இசை பொழியும் வேணு கோபாலனாக வரவேற்காமல், சார்ங்க வில் தரிக்கும் வீராதி வீரனாக வருமாறு பிரார்த்தித்தார். ஊழி நடம் புரியும் உருத்திரன் போல் ஆடினார்:

**சிவசிவ நாசே விச்வம்பர***
**அதி ஸுமங்கலம் சிவோச்சாரணம்**

அடியார்களுக்கு வீறு பிறந்தது. காஜியின் வீட்டுக்குப் படையெடுத்து விட்ட

* 'விச்வம்பரர்' என்பதே நிமாயியின் இயற்பெயர். அவரது பெற்றோருக்குப் பல குழந்தைகள் மரித்த பின் அவர் பிறந்ததால் 'நிமாயி' என்று செல்லப் பெயர் பெற்றார். இது நமது சீமையில் 'வேம்பு', 'குப்பு' என்று பெயரிடுவதை ஒக்கும்.



காந்திஜி விரும்பிய கீதம்

னர்! காஜி நடுநடுங்கினார். அப்படியே ஒடுங்கி நிமாயியிடம் சரண் புகுந்தார். நிமாயியின் கோபம் அகன்றது. அருள் மயமானார்.

மறுபடியும் ஒரு முறை மூக்குக்கு மேல் கோபம் வந்தது நிமாயிக்கு.

கண்ணன் காதலில் கனிந்து கோபிகையாக அமர்ந்திருந்தார் நிமாயி. கண்ணன் காதலின் உருவான ராதைக்கு முக்கியத்துவம் தருகிற ராதாகிருஷ்ண பக்தியே அவர் உலகுக்கு அளித்த செல்வம். கலியாண குணங்கள் நிறைந்த பரமன் மட்டும் போதாது, அந்தக் குணங்களை ரசித்த ராதையும் மற்ற கோபியரும் சேர்ந்தாலே தெய்விகத்தின் முழுமை கிட்டுகிறது எனக் கண்டார். நாயகியாகியிருந்து அவனை அநுபவிக்க வேண்டும் என்று ஆவேசம் கொண்டவர் அவர். எனவே, ஒரு நாள் 'கோபி' 'கோபி' என்று ஜபித்தபடி இருந்தார்.

''இதென்ன கூத்து ? 'கிருஷ்ண கிருஷ்ண' என்று ஜபிக்காமல் கோபியை ஜபிக்கிறீர்?'' என்று கேலியாகக் கேட்டான் ஒரு மாணவன்.

அப்போதுதான் அவருக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்தது.

ரஸராஜனை கண்ணனைவிட, அவனது ரஸத்தை அநுபவித்த ரஸிகையரான கோபியரைத் தாழ்த்திப் பேசும் போக்கை அவரால் பொறுக்க முடியவில்லை. கையிலிருந்த தடியாலேயே ஒரு போடு போட்டு விட்டார் மாணவனை.

ஒரு மாணவனைத் தண்டித்தால், மாணவர் சமூகமே படை திரட்டிக் கொண்டு வருவது இன்று சகஜம். நிமாயியின் காலத்திலேயே இப்படி நடந்தது. அடிபட்ட மாணவன் மற்ற மாணவர்களைத் திரட்டிக் கொண்டு வரப் போவதாகத் தெரிய வந்தது.

நிமாயி சிந்தித்தார். 'கோபத்தில் தண்டத்தை வீசினேன். இதற்குத் தண்டனை தேவைதான். இனி தண்டமேந்தும் சந்நியாசியாவேன். என்னைத் தாக்க இருப்பவர்களிடமே பிட்சை புகுந்துண்பேன்' என்று தீர்மானித்தார்.

கட்வாவில் கேசவ பாரதியிடம் சந்நியாச ஆசிரமம் பெற்ற நிமாயி, 'ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர்' எனப் பெயர் கொண்டார்.

ஜகந்நாதபுரியைத் தலைநகராகக் கொண்டு ஸ்ரீ கிருஷ்ண சைதன்யரின் பக்தி சாம்ராஜ்யம் எழும்பலாயிற்று. வாசுதேவ ஸார்வபௌமர் போன்ற பெரிய அத்வைத வேதாந்திகளும், ராமாநந்தராயர் போன்ற வைஷ்ணவ சிகாமணிகளும் அவரது அடியார் ஆயினர். தமிழகத்தின் திருப்பதிகள் உட்பட நாடெங்கும் சஞ்சரித்தார் சைதன்ய மகா பிரபு. பிருந்தாவனத்தில் பல காலம் வசித்து பாகவதத்தை மீண்டும் மெய்யாக்கினார்.

இப்போதும் அவரது கோபம் தலைதூக்கிய சந்தர்ப்பங்கள் உண்டு.

சோடா ஹரிதாஸ் என்ற அடியார் ஓர் இளநங்கையிடமிருந்து அரிசி வாங்கி வந்து தமக்கு உணவு படைத்ததாக அறிந்த போது சைதன்யரின் சினம் கரை கடந்து விட்டது. ''வைராகிக்குப் பெண் பிள்ளையிடம் என்ன வேலை? உன் முகத்திலேயே என்னால் விழிக்க முடியவில்லை'' என்று கூவினார்.

ஹரிதாஸ் மனம் நொந்து, தம் பிழைக்காக உண்ணாவிரதம் இருந்தார்.

''இருக்க வேண்டியதுதான்'' என்றார் சைதன்யர் கடுமையாக.

குருநாதன் கடுமையாகப் பேசியதாகத் தெரிந்ததும் ஹரிதாஸ் நேரே அவரிடம் வந்து குமுறி அழுது கும்பிட்டு விட்டுத் திரிவேணிக்குச் சென்றார். கங்கையும் யமுனையும் சரஸ்வதியும் கலக்கும் சங்கமத்தில் தம் சரீரத்தையே விட்டு விட்டார்.

அதை அறிந்த போதும் சைதன்யர் இளகவில்லை — அல்லது இளகினதாகக் காட்டிக் கொள்ளவில்லை. ''அவனவனும் தன் கர்ம பலனை அநுபவிக்கிறான்'' என்று கண்டிப்புடன் கூறிவிட்டு மௌனமானார்.

''ஓர் இளம் விதவையின் மகனிடம் நீங்கள் அதிகப் பிரியம் காட்டுகிறீர்களே; இதனால் மட்டும் அவதூறுகள் பிறக்காதா?'' என நறுக்கென்று அவரையே கேட்டுவிட்டார் தாமோதர்.

கூடியிருந்தோர் விலவிலத்துப் போயினர்.

சைதன்யரோ ஆனந்தபரவசம் அடைந்தார். ''தாமோதரா, நீயே என் உண்மை நண்பன்'' என்றார்.

ராமசந்திரபுரி என்பவரும் இவ்வாறே அவரிடம் ஒரு முறை வெளிப்படப் பேசினார்: ''உங்கள் அறையிலிருந்து எறும்பு வருவதைப் பார்த்தேன். அங்கு இனிப்புக்கள் இருந்திருக்க வேண்டும். பாகவதர்கள் உங்களுக்கு நிவேதனம் கொண்டு வருவதால் தான், துறவிக்குத் தகாத இவ்விஷயங்கள் இங்கு நடக்கின்றன'' என்றார்.

அவர் சொன்னதை மதிப்புடன் ஏற்றார் சைதன்யர். ''ராமசந்திரன் சொல்வது வாஸ்தவம். எனக்காகவும் என் இரு பணியாட்களுக்காகவும் இனித் தினமும் ஐந்து 'கண்டா' மதிப்புக்குமேல் உணவு படைக்கக் கூடாது'' என்று உத்தரவிட்டார்.

நிமாயிக்குக் கோபம் வந்தது; சைதன்யருக்கும் பல முறை கோபம் வந்தது. ஆனால் எவ்வளவு வித்தியாசம்! சைதன்யருக்கு வந்த கோபம் சுய நலக் கலப்பே இல்லாமல் உலக நலனுக்காக ஏற்பட்டதல்லவா ? அந்நிலையில் ஏற்படும் கோபமும் கோபமாகுமா ?

நிமாயி லட்சுமியைக் காதலித்து மணந்தார். சைதன்யர் கண்ணனைக் காதலித்தார். பூர்ணிமை நிலவில் பாற்கடலாகத் தோன்றிய வங்காளவிரிகுடாவைக் கண்டவுடன், யமுனையில் கோபியருடன் கண்ணன் ஜலக்ரீடை செய்ததை நினைந்து உருகி அப்படியே கடலில் பாய்ந்தார், கண்ணன் காதலில் காமினியான சைதன்யர். பிறகு புரிஜகந்நாதனின் உருவத்திலேயே அடக்கமானார்.

நிமாயி லட்சுமியிடம் கொண்ட காமத்துக்கும் இதற்கும் எவ்வளவு தூரம்? தன்னையே தியாகம் செய்து உலகை வாழ்விக்கும் இந்த நிலையில் காமமும் காமம் அல்லவே !

இதனால்தான் நரஸிமேதா கூறும் காமமும் கோபமும் அற்ற வைஷ்ணவருக்குச் சைதன்ய மகாப் பிரபுவைப் பிரதிநிதியாக்குகிறார் கனுதேசாய்.

தரத்தினை விரும்புவோர், உயர் ரகத்தினை விரும்புவோர், எம்ப்ராய்டரியில் மிகச் சிறந்ததை விரும்புவோர் என்றும் தேடுவது

# Veena

## எம்ப்ராய்டரீஸ்



ரிஜிஸ்டர்டு
டிரேட் மார்க்
கெ. 236096









தயாரிப்பாளர்கள்:

**S. S. M. பிரதர்ஸ் (பி) லிட்.,**

த. பெ. எண்: 8
குமாரபாளையம் போஸ்ட், (ஈரோடு வழி)

எங்கள் இதர உற்பத்திகள்:
யாழ் (வீணை) மார்க்
பருத்தி & ரயான் வேஷ்டிகள்,
சர்ட்டிங்ஸ், பட்டுத் துணிகள்,
விசேஷ ரக பவானி பட்டு ரிப்பன்கள்.

பிரத்யேக ஸ்டாக்கிஸ்டுகள்:
அமர்ஜோதி டிரேடர்ஸ்
99, கிடங்கு தெரு, சென்னை-1
M. A. பழனியப்ப முதலியார் & சன்ஸ்
குமாரபாளையம்

VE-104

# ராமாயணம்

## ராஜாஜி

## 32. பரதனுக்குச் செய்தி

கௌசல்யா தேவி இறந்துபோன அரசனைக் கட்டிக் கொண்டு, ''இன்றே நானும் அரசனோடு கட்டை ஏறுவேன். புத்திரனில்லாமலும் புருஷனில்லாமலும் அனாதையாக என்னால் ஜீவித்திருக்க முடியாது'' என்று அழுது கொண்டேயிருந்தாள். அரண்மனையில் கூடிய பெரியோர்களும் உத்தியோகஸ்தர்களும் கஷ்டப்பட்டு அவளை மெதுவாக விலக்கி அழைத்துச் சென்றார்கள்.

பிறகு உத்தரகிரியைகளைப் பற்றி யோசித்தார்கள். அரசனுடைய புதல்வர்கள் யாருமே பக்கத்திலில்லை; ராமலக்ஷ்மணர்கள் வனம் சென்றுவிட்டார்கள். பரதனும் சத்ருக்னனும் மாமன் வீட்டில் வெகு தூரத்திலிருந்தார்கள். என்ன செய்வதென்று யோசித்து முடிவில் பரதனுக்குச் சொல்லி அனுப்புவது என்று தீர்மானித்தார்கள். அவன் வந்து சேரும் வரையில் தேகம் கெடாமலிருக்க ஏற்பாடுகள் செய்தார்கள்.

உலகமெல்லாம் புகழ் பரவிப் பல்லாண்டு அரசு புரிந்த மகாராஜாவினுடைய உடலானது எண்ணெய்க் கொப்பரையில் கிடந்தது! அயோத்தியா நகரம் தன் பிரபாவத்தை இழந்து இருளில் ஆழ்ந்தது. எங்கும் அழுகுரலும் கண்ணீருமாக இருந்தது. ஜனங்கள் ஆண்களும் பெண்களும் கூடிக் கூடிக் கைகேயியை நிந்தித்துப் பேசினார்கள். ஊர் முழுவதும் பெருங் கவலையில் மூழ்கிற்று. இளவரசனாக வேண்டியவன் காடு சென்றான். பரதன் நகரத்தில் இல்லை. ராஜ்யத்துக்குப் பெரும் ஆபத்து வரும் என்று திகிலடைந்தார்கள். அரசனில்லாமல் ஒரு மக்கட் கூட்டம் இருக்க முடியும் என்பதை அந்த நாளில் யாரும் கண்டதில்லை.

அன்றிரவு எப்படியோ கழிந்தது. மறு நாள் காலை மந்திரிகளும் காரியஸ்தர்களும் பெரியோர்களும் சபாமண்டபத்தில் கூடினார்கள். மார்க்கண்டேயர், மௌத்கல்யர், வாமதேவர், காசியபர், காத்தியாயனர், கௌதமர், ஜாபாலி இன்னும் பல வேதியர்களும் சுமந்திரன் முதலிய மந்திரிகளும் வசிஷ்டரை வணங்கி, ''சுவாமி, ஒரு ராத்திரி ஒரு நூற்றாண்டாக இருந்தது. மகாராஜா சுவர்க்கம் சென்றார். ராமனும் லக்ஷ்மணனும் வனம் சென்றுவிட்டார்கள். பரதனும் சத்ருக்னனும் கேகய நாட்டில் பாட்டன் வீட்டில் வெகு தூரத்தில் இருக்கிறார்கள். தேசம் அராஜக நிலையில் இருக்கிறது. உடனே யாரையாவது ராஜ்யப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும். அரசன் இல்லாத தேசம் பாழாய்ப் போகும் அல்லவா ?

''அரசன் இல்லாத நாட்டில் நியாயமிருக்காது. தகப்பன் சொற்படி மகன் கேட்க மாட்டான். மனைவி புருஷனுக்குக் கட்டுப்பட மாட்டாள். மழை கூடப் பெய்யாது. நாடெல்லாம் திருட்டும் கொள்ளையுமாக இருக்கும். ஜனங்களுக்குள் பரஸ்பர நம்பிக்கையும் ஒத்துழைப்பும் இருக்காது. பயிர்த் தொழில், வியாபாரம் எதுவுமே சரிவர நடக்காது. அரசனுடைய காப்பின்றி எப்படிப் போக்கு வரவு, வியாபாரம், அல்லது பயிர்த் தொழில் நடக்கும் ? செல்வம் குன்றிப் போகும். தேவாலயங்களில் திருவிழாக்களும் பூஜைகளும் சரியாக நடைபெறாமல் நாட்டில் மக்களுடைய வாழ்க்கை எல்லாம் கெட்டுப் போகும். இதிகாசங்களையும் புண்ணிய கதைகளையும் சொல்லுவோரும் இருக்கமாட்டார்கள். கேட்போரும் இருக்க மாட்டார்கள். கதவைத் திறந்து வைத்துத் தூங்க முடியாது. நாகரிகம் என்பது தேய்ந்து தேய்ந்து ஒழிந்தே போகும். தவம், விரதம், ஆனந்தம் எதுவுமே இருக்காது. சாஸ்திரம் படிப்போர் இருக்க மாட்டார்கள். அரசன் ஒருவன் இருந்து நாட்டின் அமைதியைக் காத்தால் அல்லவோ இவை யாவும் நடைபெறும் ? அரசனில்லாவிடில் பெண்களுடைய இயற்கை அழகும் அலங்காரமுங்கூட ஒழிந்து போகும். தன் பொருள் தனது என்கிற உறுதியில்லாமல் போகும். மீன்களைப் போல் ஒருவரையொருவர் தின்று சாவார்கள். கொடுமையும் துன்பமும் வளர்ந்து கொண்டு போய் நாடு பாழாகப் போகும். நாட்டில் நிலைத்து நிற்க வேண்டிய எல்லாவித நன்மைகளுக்கும் ஒரு அரசன் வேண்டும்'' என்றார்கள்.

இவ்வாறெல்லாம் அந்தச் சபையில் கூடிய பெரியோர் அராஜகத்தின் அபாயங்களைப் பற்றிப் பேசியதாக வால்மீகி அழகாக வர்ணித்திருக்கிறார். ''நாடெல்லாம் இருள் மூடிவிட்டாற் போலாகி விட்டது. தருமம் அழிந்தே போகும் போலிருக்கிறது. உடனே அரசனை அமைத்துக் கொள்ள வேண்டும்'' என்றார்கள்.

சாமர்த்தியமான தூதர்களை அழைத்து வசிஷ்டர், ''உடனே புறப்படுங்கள். நான் சொல்லுவதைக் கவனமாய்க் கேளுங்கள். எங்கும் நிற்காமல் அதி வேகமாகப் போய்க் கேகய தேசம் சேர வேண்டும். உங்கள் முகங்களிலாவது நடவடிக்கைகளிலாவது துக்கக் குறிகள் ஏதும் இருக்கக் கூடாது. பரதன் தாங்க மாட்டான். அரசன் இறந்து போன விஷயத்தை வெளியிடாமல் இருக்க வேண்டும். 'குலத்தின் குருவும் மந்திரிகளும் உங்களை உடனே அயோத்தியைக்கு வரும்படியாகச் சொல்ல எங்களை அனுப்பியிருக்கிறார்கள்' என்று மட்டும் பரதனுக்குச் சொல்லுங்கள். உடனே புறப்பட்டு வரச் சொல்லி அழைத்து வர வேண்டும். ராமனும் சீதையும் வனம் போன விஷயமாவது, அரசன் துக்கப்பட்டு மரணமடைந்ததைப் பற்றியாவது ஒன்றும் சொல்ல வேண்டாம். துக்கக் குறிப்பு இல்லாமலிருப்பதற்காக ஆபரணங்களும் ஆடைகளும் எடுத்துக் கொண்டு போய்க் கேகய ராஜனுக்கு வழக்கம் போல் தந்து மரியாதை செய்யுங்கள்'' என்றார்.

**வாய்மை எனப்படுவது**
**யாதெனின் யாதொன்றும்**
**தீமை இலாத சொலல்**

**பொய்மையும் வாய்மை**
**யிடத்த புரைதீர்ந்த**
**நன்மை பயக்கு மெனின்**

என்று குறளாசிரியர் சொல்லியிருப்பதின் பொருளை இதனால் அறியலாம்.

தூதர்களும் உடனே தாமதமின்றிப் பிரயாணத்துக்கு வேண்டிய உணவு, உடையெல்லாம் கட்டிக் கொண்டு மரியாதைப் பரிசுகளும் எடுத்துக் கொண்டு வேகமாகச் செல்லும் குதிரைகளில் ஏறிக் குறுக்கு வழியாகக் காடும் மலையும் ஆறுகளும் கடந்து சென்றார்கள்.

கேகய தேசம் அயோத்தியையிலிருந்து வெகு தூரத்தில் இருந்தது. அது தற்காலத்துப் பஞ்சாப் தேசமும் அதற்கும் மேற்கிலிருக்கும் பிரதேசமுமாக வைத்துக் கொள்ளலாம். மலைகளும் ஆறுகளும் தாண்டிக் குதிரைகள் மிகவும் களைத்துப் போகத் தூதர்கள் கேகய ராஜாவின் பிரதான நகரமான ராஜக்கிரகம் போய்ச் சேர்ந்தார்கள். மறு நாள் காலை பரதனைப் பார்க்க ஏற்பாடு செய்தார்கள்.

தூதர்கள் போய்ச் சேர்ந்த அன்று, இரவில் பரதன் பயங்கரமான கனவுகளைக் கண்டு, அதனால் காலை எழுந்த போது கவலை கொண்டு, முகம் வாடி எழுந்தான். அவனுடைய சிநேகிதர்கள் இதைக் கண்டு நர்த்தனமும்



ஹாஸ்யமும் செய்து இன்னும் பல விதத்தில் அவன் கவலையைப் போக்கி வாடிய முகத்தை மலரச் செய்ய முயன்றார்கள். ஆயினும் அவன் கவலைப் பட்ட நிலையிலேயே இருந்தான்.

அன்பின் ரகசிய வேகங்களை நாம் இன்னும் முற்றிலும் காணவில்லை. தசரதனுடைய மனோ வேதனையும் மரண சங்கடமும் வெகு தூரத்திலிருந்த பரதனுடைய உள்ளத்தையடைந்து தாக்கிக் கனவை உண்டாக்கியதாகக் கருதலாம்.

''என் பிரிய சகோதரனான ராமனோ, அல்லது லக்ஷ்மணனோ அல்லது நானோ மரணமடையப் போவதாகத் தோன்றுகிறது. அதிகாலையில் கண்ட கனவு வீண் போகாது என்று சொல்லுவார்கள். பயங்கரமான ஸ்வப்பனத்தைக் கண்டேன். என் மனம் விவரிக்க முடியாத கலவர நிலையிலிருக்கிறது. ரொம்பவும் திகிலாக இருக்கிறது. என்ன செய்வேன்?'' என்று சொல்லிக் கொண்டே இருந்தான். அச் சமயம் தூதர்கள் தாங்கள் வந்திருப்பதைத் தெரிவித்து சந்நிதானத்துக்கு வர அநுமதி கேட்டார்கள்.

கேகய ராஜனும், அவனுடைய குமாரன் யுதாஜித்தும் தூதர்களை வெகு மரியாதையுடன் வரவேற்றார்கள். அவர்களும் செலுத்த வேண்டிய வணக்கங்களை முறைப்படி செலுத்திய பிறகு பரதனை நோக்கிச் சொன்னார்கள் :

''புரோகிதர்களும் மந்திரிகளும் தங்களுக்கு மங்கள வாழ்த்துக்கள் சொல்லி, உடனே அயோத்தியா நகரத்துக்கு அழைத்து வர எங்களை அனுப்பியிருக்கிறார்கள். மிக அவசரமான காரியம் என்று சொல்லியனுப்பி யிருக்கிறார்கள். இந்த வஸ்திரங்களையும் ஆபரணங்களையும் தாங்கள் தொட்டு அரசனுக்கும் மாமனுக்கும் சமர்ப்பிக்க வேண்டும்'' என்று அவர்கள் கொண்டு வந்த ஆடையாபரணப் பொருள்களைப் பரதன் முன் வைத்தார்கள்.

அவனும் அவற்றைப் பெற்றுக் கொண்டு, ''தந்தை தசரதன் க்ஷேமமா? ராமனும் லக்ஷ்மணனும் சுகமா? அனைவரும் நோயொன்றுமில்லாமல் சுகமாக இருக்கிறார்களா?'' என்று விசாரித்தான்.

''அனைவரும் நோயின்றி இருக்கிறார்கள் ராஜகுமாரனே! உன் மங்களத்தை எல்லோரும் கோருகிறார்கள். அதற்காகவே சீக்கிரம் வரச் சொன்னார்கள்'' என்றார்கள்.

உண்மையை மறைத்துப் பேசினார்கள். ஆயினும் அவர்களுடைய பேச்சு பரதனுக்குப் பட்டாபிஷேகம் நடக்க வேண்டும் என்பதைத் தொனிக்கச் செய்தது.

தூதர்களுடைய விருப்பப்படியே அயோத்திக்குப் போக ராஜகுமாரன் தன்னுடைய பாட்டனார், மாமன் முதலியவர்களுடைய அநுமதியைக் கேட்டுப் பெற்றான். பரதன் அயோத்தியைக்கு உடனே போவதற்கான ஏற்பாடுகளைக் கேகய ராஜனும் யுதாஜித்தும் செய்தார்கள். அயோத்தியில் தசரத மகாராஜாவுக்கும் ராமனுக்கும் மற்றவர்களுக்கும் தருவதற்கென்று கேகய ராஜ்யத்தில் கிடைக்கக் கூடிய மிக விலை உயர்ந்த சன்மானப் பொருள்களைத் திரட்டித் தேர்களில் வைத்து, பரதனையும் சத்ருக்கனனையும் பெரும் பரிவாரத்துடன் அனுப்பி வைத்தார்கள். தேர்கள் வேகமாக அயோத்தியை நோக்கிச் சென்றன. (தொடரும்)

---


சிலையைத் தேடி...
கதை
வாண்டுமாமா
சித்திரம்
ரமணி..
4


மழைக் கோட்டணிந்த மனிதன் தங்களைப் பின் தொடருபவனா என்பதை அறிய முயலுகிறார்கள். நீலாவும் ரவியும் பெரிய வீதியைக் கடந்து ஒரு சிறிய தெருவிற்குள் நுழைகிறார்கள்.
நல்ல வேளை, நம் அதிர்ஷ்டம் இருட்ட ஆரம்பித்து விட்டது.
உன் பொம்மையின் கூட்டைக்குள் ரகசியச் செய்தி இருக்கிற தென்ற சந்தேகம் யாருக்கும் வராது நீலா, பயப்படாதே.


மறுபடியும் மறைந்து ஒளிந்த படி அவனைப் பார்க்கிறார்கள்.
அவன் இங்குதம் வருகிறானா நீலா?
ஆமாம் நிச்சய மாக அவன் நம் மைத் தான் பின் தொடரு கிறான் ரவி...


குறுகிய தெரு, சந்துகளில் நுழைந்து ஓடு கிறார்கள்...


நாம் பதுங்கிக் கொள்ள ஒரு இடத் தைத் தேட வேண் டும் ரவி.
அது ஒன்றும் கஷ்டமில்லை. இருள் நமக்கு உதவி செய்யு


உஷ்.. உஷ்.. உஷ்...
அது — ரயிலின் சத்தமல் லவா? அப் படியானால்...
அருகில் ஏதோ ஸ்டேஷன் இருக்கிறது. எனக்கொரு அருமையா 'ஐடியா' தோன்று கிறது...


தூரத்தில் மழைக் கோட்டணிந்த மனிதன் பின் தொடருவதைக் கவனிக்காமலேயே, ரயில் சத் தம் வந்த திசை நோக்கி ஓடி றார்கள்..
அந்த ஆள் நம்மைத் தவற விட்டிருப்பானில் லையா?
இருக்கலாம். ஆனால் அந்த விலாசத்துக்கு நாம் போகு முன் நம்மை அவன் பின் தொடரவில்லை என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேணும்.


ரயில்வே குட்ஸ் யார்டு..!
என்ன அதிர்ஷ்டம்?
வா, ரவி...


மரஸ்லீப்பர்க ளாலான தடுப் புச் சுவரைத் தாண்டிக் குதிக்கிறார்கள்.


நின்றுகொண்டிருந்த ஒரு ரயில் வண்டியின் பெட்டிக்குள் ஏறினார்கள்.....
அக்கா, வண்டி காலி! நாம் ஒளிந்து கொள்ள அருமையான இடம்.
என்னுடைய 'ஐடியா'தானே?


அதே சமயம் 'கூ' என்று தூரத்தில் எஞ்சின் ஒலித்தது. அடுத்த விநாடி.....
நீலா, நாம் ஏறியுள்ள வண்டி நகர ஆரம்பிக்கிறதே.....
நாம் விரைவில் கீழே குதித்து விட வேண்டும் ரவி. வா..வா...


பயமும் பரபரப்பும் இதயத்தைப் படபடக்க வைக்க இருவரும், வண்டி வேகம் எடுக்கு முன் மறுபக்கத்து வழியே வெளியே குதித்தார்கள்....


இங்கிருந்து போய் விடுவோம். வேறு எங்காவது போய் ஒளிந்து கொள்ளலாம்..
அந்த மனிதரால் இனி நம்மைக் கண்டு-பிடிக்க முடியாது


ஆனால் திடீரென்று அவர்கள் அருகே பேச்சுக் குரல் கேட்டது......
ரவி.. இந்தச் சாமான்'வார்களின்' அடியில் நாம் ஒண்டிக் கொள்ளலாம். இதற்கு எந்தத் தொந்தரவில்லை. பத்திரமான இடமும் கூட...


நீலாவும் ரவியும் ஒளிந்திருந்த வண்டிக்குப் பக்கத்தில்.....
இந்தப் பிராந்தியத்தை விட்டு எந்தக் குழந்தைகளும் ஓடுவதை எங்கள் ஆட்கள் யாரும் பார்க்கவில்லையாம்.
அப்படியானால் அவர்கள் இங்கு ஏதோ வண்டிக்குள்தான் இருக்க வேண்டும். நாம் கவனமாகத் தேட வேண்டும்.

தொடரும்...


கடவுளே! அவர்கள் பார்வையில் எங்களைச் சிக்க வைக்காதே. இந்திரபால் மாமாவின் செய்தியைச் சேர்ப்பிக்கும் வரை எவ்விதமான ஆபத்தும் வரக் கூடாது. ஆண்டவா....

# 'ஆஸ்ப்ரோ'

# மட்டுமே மைக்ரோஃபைண்ட் செய்யப்படுகிறது அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக










சாப்பிடும் அளவு:
வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள் தேவையானால் மீண்டும் சாப்பிடவும்.
குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

கீழ்க் கண்டவைகளுக்கு புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' சாப்பிடுங்கள்:
நோவு • தலைவலி • உடல்வலி • ஃப்ளு • ஜுர வேகத்துடன் கூடிய ஜலதோஷம் • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி.

புதிய மைக்ரோஃபைன்ட் 'ஆஸ்ப்ரோ' இப்பொழுது கிடைக்கும் அதி நவீனமான வலி நிவாரணியாகும்.



**புதிய மைக்ரோஃபைன்ட்**
**'ஆஸ்ப்ரோ'** அதிவேகமாக
**வலியை வெளியே இழுத்துவிடுகிறது.**

நிகோலஸ் (N) தயாரிப்பு

NL.37.TAM

# மனநோய் மருத்துவர் மகாநாடு

ஐந்துக மதகரியை வசமாக நடத்தினாலும் நடத்தலாம், ஆனால் மனத்தை வசப்படுத்திக்கொண்டு போவது கஷ்டம் என்று நம் முன்னோர்கள் கண்டு சொல்லி யிருக்கிறார்கள்.

நல்ல நிலையில் உள்ள மனத்தின் நிலையே இப்படியென்றால் நோயுற்ற மனத்தின் நிலையைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை.

முன்னெல்லாம் நோயுற்ற மனத்தினரைப் பயித்தியம் என்று சொல்லிச் சங்கிலியால் கட்டிப் போட்டு இருட்டறையில் தள்ளி என்னவெல்லாமோ கொடுமைப்படுத்துவர்.

ஆனால் இப்போதோ அப்படியெல்லாம் செய்வதில்லை. அன்புடன் நடத்துகிறார்கள். இதற்கெல்லாம் காரணம் மனநோய் வைத்திய சாஸ்திரம் நம்ப முடியாத அளவுக்கு முன்னேறியிருப்பதுதான் என்பது சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற தென் பிராந்திய மன நோய் மருத்துவ மகாநாட்டிலிருந்து தெரிய வந்தது. மன நோய் என்பது உடல் நோயைப் போலத்தான். வீண் கலவரப்பட வேண்டியதில்லை. உடல் நோய் ஏற்பட்டால் டாக்டரை அணுகி சிகிச்சை பெறுகிறோமே, அப்படி மனநோய் ஏற்பட்டால் மனநோய் டாக்டரை அணுகி சிகித்சை பெற்றால் விரைவில் குணமடையலாம் என்பது தெரிய வந்தது. இந்த மகாநாட்டையொட்டி ஓர் அருமையான மலர் வெளியிட்டிருக்கிறார்கள். அந்த மலரில் பல மனநோய் மருத்துவர்கள் அருமையான கட்டுரைகள் தீட்டி யிருக்கிறார்கள்.

மகாநாட்டின் வரவேற்புக் கமிட்டி தலைவரான ரத்னவேலு சுப்பிரமணியம் அவர்கள் பொது வைத்தியம் செய்பவர்தான். உடல் நோய் என்று அவரிடம் வரும் பலருக்கு மனநோயின் விளைவே அந்த உடல் நோய் என்று கண்டு சிகிச்சை செய்திருக்கிறாராம். ஆனால் இதைக் கண்டுபிடிப்பது அவ்வளவு எளிதல்ல. அனுபவமும் சாமர்த்தியமும்தாம் கை கொடுத்து உதவுகின்றன.

இரண்டு குழந்தைகளைப் பெற்ற ஓர் அம்மையார் கடும் ஆஸ்த்மா நோய்க்கு உள்ளாகியிருந்தார். அம்மையாரும் கணவரும் மிக அன்யோன்ய தம்பதியர். இருப்பினும் கணவர் அவரை விட்டு ஆயிரம் மைல்களுக்கு அப்பால் வாழ வேண்டி யிருந்தது. காரணம் அம்மையாரின் தாயாருக்கு ஒரு தீராத நோய். தாயாருக்கு இந்த அம்மையார்தான் ஒரே அருமந்தப் புதல்வி. தன் மகள்தான் தனக்குப் பணிவிடை செய்ய வேண்டும் என்று தாயார் பிடிவாதம்பிடித்ததால் கணவரை அனுப்பி விட்டுத் தாய்க்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தார் அம்மையார்.

இந்த விவரம் டாக்டர் ரத்தினவேலு சுப்பிரமணியம் அவர்களுக்குத் தெரிய வந்தது. கணவரைப் பிரிந்திருக்கும் மனவேதனைதான் ஆஸ்த்மாவுக்குக் காரணமாக இருக்க வேண்டும் என்று கருதி, தாயாரைக் கண்டு, பணிவிடை செய்ய ஒரு நர்ஸ் அமர்த்திக்கொள்ளும்படி வேண்டிக்கொண்டு மகளைக்



செப்டம்பர் 28, 29 தேதிகளில் நடைபெற்ற மகாநாட்டை கல்வி அமைச்சர் திரு நெடுஞ்செழியன் தொடங்கி வைத்தார். மேலே உள்ள படத்தில் டாக்டர் சாரதாமேனன், திரு ரத்னவேலு சுப்பிரமணியம், திரு நெடுஞ்செழியன். கீழே: மகாநாட்டில் குழுமியிருந்த டாக்டர்கள்.





"அமெரிக்காவின் தலைசிறந்த விஞ்ஞானிகள் நிலைக்கு என்னை நீ உயர்த்திவிட்டாய் சந்திரா! சந்திரனிலிருந்து வந்த கல்லை அமெரிக்கர்கள் ஆராய்கிறார்கள், சந்திரா படைக்கும் சாதத்தின் கல்லை நான் ஆராய்கிறேன்!"

கணவருடன் வாழ அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொண்டார். வினவு ஆஸ்த்மா இருந்த இடம் தெரியாமல் பறந்து விட்டது.

டாக்டர் சாரதா மேனன் அவர்கள் நாம் சமீப காலத்தில் கண்டு வரும் ஓர் அனுபவத்தைச் சொன்னார். தொழிலாளர் நலனுக்கு ஸ்டேட் வைத்திய இன்ஷுரன்ஸ் ஆஸ்பத்திரிகள் நடைபெற்று வருகின்றன. அந்த ஆஸ்பத்திரிகளுக்குத் தலைவலி, மார்பு வலி, முதுகு வலி என்று பலப்பல சொல்லிக் கொண்டு வரும் தொழிலாளர்களைப் பலவிதமாகவும் பரிசோதனைகளைச் செய்து பார்த்தால், நோயுற்றிருப்பதற்கான அறிகுறி ஒன்றுமே தட்டுப்படுவதில்லை. எல்லாம் சீராகவே இருக்கின்றன. இருந்தாலும் மார்புவலி என்று அந்தத் தொழிலாளி துடிப்பார். அப்போது அவர் உடலில் கோளாறில்லை; மனக் கோளாறு என்று மன நோய் ஆஸ்பத்திரிக்கு அனுப்பி வைக்கிறார்கள்.

நம் நாட்டில் மன நோய் விஷயத்தில் புதிய சிந்தனை தேவைப்படுகிறது. மேனாடுகளில் மனநோய்ச் சிகிச்சை சர்வசாதாரணமாகக் கருதப்படுகிறது. அதைப் போலவே நம் நாட்டிலும் சர்க்கார் பொது ஆஸ்பத்திரிகளில், கண்நோய்க்கு, இதய நோய்க்கு என்று தனித் தனி பிரிவுகள் இருப்பது போல், அந்த ஆஸ்பத்திரிகளிலேயே மன நோயாளிகளுக்கென்று ஒரு பிரிவு இருக்க வேண்டும் என்று மன நோய் ஆஸ்பத்திரியின் சூபரின்டெண்ட் டாக்டர் சாரதா மேனன் வற்புறுத்தினார்.

சில நோயாளிகள் தொழிற்கூடத்தில் அலுவலகங்களில் நன்கு வேலை செய்வார்கள். சாதாரணமாகப் பழகுவார்கள். ஆனால் வீட்டுக்குப் போனவுடன் தன் மாமியாரைப் பார்த்தோ, வேறு எதைப் பார்த்தோ மன நோய் அடைவார்கள். விசித்திரமாக நடந்து கொள்ளுவார்கள். இப்படிப்பட்டவர்களை அச் சூழலை விட்டு அகற்றி விட்டால் போதும், மீண்டும் நல்ல நிலைக்கு வந்துவிடுவார்கள். இப்படிப்பட்டவர்களுக்கென்றே 'பகல் ஆஸ்பத்திரி', 'இரவு ஆஸ்பத்திரி' என்று மேல் நாடுகளில் இருக்கின்றன.

மனநோய் மருத்துவத்துக்குச் சென்னை பல்கலைக் கழகத்தில் போதிய முக்கியத்துவம் அளிக்கப்பட்டதில்லை. இத்துறையில் விசேஷப் பட்டம் பெற வேண்டுமானால் தமிழக வைத்திய மாணவர்கள் பெங்களூருக்கோ மற்ற சர்வ கலாசாலைகளுக்கோ சென்று பட்டம் பெற வேண்டி யிருக்கிறது. அன்று மகாநாட்டுக்குத் தலைமை வகித்த சென்னை பல்கலைக் கழக புதிய துணைவேந்தர் திரு நெ. து. சுந்தரவடிவேலு, இத்துறைப் பட்டப் படிப்புக்கு ஏற்பாடு செய்ய முயற்சிகள் நடைபெற்று வருவதாக வாக்களித்தது பலருக்கு நிம்மதி யளித்தது.

இன்றைய தமிழ் நாட்டின் ஜனத்தொகை நான்கு கோடி. மனநோய் மருத்துவத்தில் பயிற்சி பெற்றவர்கள் இங்கு சுமார் இருபது பேர்தான் இருக்கிறார்கள். மிகமிகக் குறைந்த பட்சமாகக் கணக்கிட்டால் கூட ஆயிரத்தில் இரண்டு பேர் சிறிய அளவிலோ பெரிய அளவிலோ மனநோயுற்றவர்களாக இருக்கிறார்கள். இந்த விகிதாசாரத்தின்படி பார்த்தால் தமிழ் நாட்டில் எண்பதாயிரம் பேர் மனநோயுற்றவர்கள் இருக்கிறார்கள். இவர்கள் நோயைத் தீர்க்க இருபது வைத்தியர்கள் போதுமா? இந்தப் பரிதாப நிலை சீர்திருந்த எத்தனை காலம் பிடிக்குமோ என்று அங்கலாய்க்க வேண்டியிருக்கிறது.

அன்று "மண வாழ்க்கையும் விவாகரத்தும்" என்பது பற்றி முன்னாள் பிரதம நீதிபதி தலைமையில் ரஸமான கருத்தரங்கு நடைபெற்றது. இன்றுள்ள சர்க்கார் சட்டப்படி விவாகரத்துக் கோரலாம். மேல் நாட்டில் உள்ள அளவு இங்கு விவாகரத்து கோருபவர்களில்லை. எனினும் செல்வம் கொழிக்கும் குடும்பங்களில் உள்ளோர் மிக மிக அற்பக் காரணங்களுக்காகக் கூட விவாகரத்துக் கோரி வருவதாக திரு எம். அனந்தநாராயணன் தெரிவித்த போது சபையோர் திடுக்கிட்டனர். நம் நாட்டிலுமா இந்த நிலைமை என்றுதான் எண்ணத் தோன்றியது. ஒரு பெண் தினந்தோறும் சிற்றுண்டி சாப்பிட மேஜையின் முன் உட்காரும்போது 'என் கணவனின் முகத்தைப் பார்க்க வேண்டி யிருக்கிறதே! இந்தக் கஷ்டத்தைச் சகிக்காமல் விவாகரத்துக் கோருகிறேன்' என்று சொன்னாளாம்!

இப்படிக் குடும்பங்களில் அற்பக் காரணங்களுக்காக எழும் மன முறிவுகள் தக்க மனோதத்துவ நிபுணர்களின் உதவியை நாடினால் சீர்ப்படும் என்பதில் ஐயமில்லை.

எல்லா மனப் பிரச்னைகளுக்கும் நோய்களுக்கும் தக்க மருந்து நமது சமய வழிபாடு என்னும் மருந்து. இதை டாக்டர் ரத்னவேலு சுப்பிரமணியம் நினைவுகூர்ந்தார். சமயப் பண்பாடு குறைந்து வருவது தவறு என்று எச்சரிக்கை செய்தார்.

ஆம்; 'பித்தம் தெளிய மருந்தொன்றிருக்குது' என்று கோபாலகிருஷ்ண பாரதியார் அன்றே சொல்லியிருக்கிறார் அல்லவா?

— எஸ். வி. எஸ்.

# பக்கத்து வீட்டுப் பிரமுகர்



**[ராஜா அண்ணாமலைபுரத்தில் திரு ஸ்ரீராமனின் வீட்டுக்குப் பக்கத்திலிருப்பவர் 'மெர்க்குரி ஆட்டோமோபைல்ஸ்' நிறுவனத்தைச் சேர்ந்த திரு கே. வி. வெங்கடேஸ்வரன். பதினைந்து ஆண்டுப் பழக்கத்தின் அடிப்படையில் சொல்லுகிறார்.]**

கிரிக்கெட் கண்ட்ரோல் போர்ட் காரியதரிசி ஸ்ரீராமன் எங்களுடைய நெடுநாளைய நண்பர். இவர் ராஜா அண்ணாமலைபுரவாசியாகிப் பதினைந்து வருஷங்களாகிறது. அதற்குமுன் இவர் பிறந்து வளர்ந்து படித்தது எல்லாம் திருவல்லிக்கேணியில்தான்!

சேப்பாக்கம் கிரிக்கெட் மைதானம் திருவல்லிக்கேணிப் பகுதியை ஒட்டியிருந்ததால் ஸ்ரீராமனுக்குப் பத்து வயதானபோதே கிரிக்கெட்டில் ஆர்வம் பிறந்துவிட்டது. 1928ஆம் ஆண்டில் ஆர்தர் கில்லிகன் தலைமையில் இங்கிலாந்து கிரிக்கெட் கோஷ்டியினர் சென்னைக்கு வந்து சேப்பாக்கம் மைதானத்தில் விளையாடினர். ஸ்ரீராமனுக்கு மைதானத்துக்குள்ளே போய் உட்கார்ந்து சௌகரியமாக ஆட்டம் பார்க்க வசதி இல்லாத நிலைமை. ஆகவே, தன்னை ஒத்த நண்பர்கள் சிலருடன் சேப்பாக்கம் மைதானத்தை ஒட்டியுள்ள மரத்தின் உச்சியில் ஏறி உட்கார்ந்து ஆனந்தமாக ஆட்டத்தை ரசித்தான்.

அதே ஆர்தர் கில்லிகனை இங்கிலாந்து கிரிக்கெட் சங்கத் தலைவர் என்ற முறையில் 1968ம் ஆண்டில்லார்ட்ஸ்மைதானத்தில், ஸ்ரீராமன் சந்தித்து இந்திய கிரிக்கெட் சங்க 'டையை' அளித்துக் கௌரவித்தார். நாற்பது ஆண்டுகளுக்கு முன்னால், தாம் மரத்தின் மேலிருந்து பார்த்த கிரிக்கெட் பந்தயத்தில் நிகழ்ந்த சில அபூர்வ சாதனைகளைப் பற்றியும், ஆட்டக்காரர்கள் அநாயாசமாகப் பந்தைப் பிடித்தது பற்றியும், கில்லிகனிடம் விமரிசித்தபோது, அவர் பிரமித்துப் போனாராம்.

மற்றொரு இங்கிலாந்து கிரிக்கெட் சங்கத் தலைவர் ஜி. ஓ. அல்லன் என்பவர் தில்லியில் ஸ்ரீராமனைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தபோது 'உங்கள் நாட்டில் மரங்கள் மீதெல்லாம் ஏறிக் கிரிக்கெட் பார்க்க வந்துவிடுகிறார்களே' என்று அங்கலாய்த்தபோது, 'ஏன்? நானே அப்படிப் பார்த்துப் பார்த்து ஆர்வத்தை வளர்த்துக் கொண்டவன்தான்' என்று தயங்காமல் பதில் சொன்னார்.

1934–35ல், ஜார்டைன் என்பவர் தலைமையில் ஒரு கிரிக்கெட் கோஷ்டி சென்னைக்கு வந்து விளையாடியது. அப்போது ஸ்ரீராமனுக்குக் கிரிக்கெட் விளையாட்டில் இருந்த ஈடுபாட்டைக் கண்டு, அவருடைய பள்ளி நண்பர்கள், தலா அரையணா ஓரணா என்று ஒன்னரை ரூபாய் வசூலித்து டிக்கட் வாங்கி முதல் இரண்டு நாட்கள் ஸ்ரீராமனை மைதானத்துக்குள்ளே அனுப்பிவைத்தார்கள். மூன்றும் நாள் அவர்கள் அபிமானம் வக்கரித்து விட்டது. 'இவனே என்ன தினம் பார்க்கிறது? நம்முள் யாராவது இன்று போகலாமே?' என்று நினைத்தார்கள். ஸ்ரீ ராமன் கொஞ்சம்கூட வருத்தப்படவில்லை. தன் வழக்கமான மரத்தைத் தேடிப் போய் ஏறி உட்கார்ந்து எஞ்சிய நாட்கள் விளையாட்டைப் பார்த்தான்!

அப்போது மரத்திலேறி உயர்ந்தவர் இப்போது கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு காரியதரிசியாக உயர்ந்து, உலகத்தின் பல பாகங்களிலுமுள்ள கிரிக்கெட் வீரர்களுடன் பழகும் வாய்ப்பைப் பெற்றிருக்கிறார்.

இவர் தம் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளக்கூட கிரிக்கெட்தான் உதவியது. அடையாறு இளைஞர்கள் குழுவின் சார்பில் கிரிக்கெட் பந்தயம் ஆட வந்த முத்தையா செட்டியாரும், திருவல்லிக்கேணி யுவர்கள்



ஸ்ரீராமன் _ வெங்கடேஸ்வரன்



''பங்கஜம் மாமி கலியாணத்துக்கு ஏற்ப அலங்காரம் பண்ணிப்பாள். குறிஞ்சி மலர் பன்னிரண்டு வருஷத்துக்கு ஒரு முறை பூக்கும் போது இந்தக் குறிஞ்சி மலர் புடவையைக் கட்டிக் கொள்வாள்.''

''ஆமாம்! இதுவரை ஐந்தாறு தடவைதான் அவள் இந்தப் புடவையைக் கட்டிண்டு பார்த்திருக்கிறதாக என் பாட்டிகூடச் சொன்னாள்!''

சார்பில் மட்டை பிடித்த ஸ்ரீ ராமனும் விளையாட்டு மைதானத்தில் சந்தித்துக் கொண்டார்கள். அந்த அடிப்படையில் தீவிர நண்பர்களுமாய் விட்டார்கள். செட்டியார், பிற்காலத்தில் தமக்குச் சொந்தமான ஸ்தாபனம் ஒன்றில் இவருக்குப் பொறுப்பான உத்தியோகத்தைக் கொடுத்து உதவினார். கடந்த இருபத்தி ஆறு வருடங்களாகக் 'கமர்ஷியல் பிரிண்டிங் ஹவுஸ்' மானேஜராக இருந்து வருகிறார் ஸ்ரீராம்.

காலையிலே கொஞ்சம் சாவகாசமாக எழுந்திருப்பார். ஏழரை மணியிலிருந்து ஒன்பது மணி வரை கிரிக்கெட் கண்ட்ரோல் போர்ட் வியவகாரங்களைக் கவனிக்கத்தான் சரியாக இருக்கும். பத்து மணிக்குச் சரியாகக் காரியாலயத்துக்குப் போனால், அங்கிருந்து மாலை ஐந்து மணிக்கு மேல் அண்ணாமலை மன்றத்துக்குப் போய்ச் சேருவார். அதன் நிர்வாகத்திலும் பொறுப்பு உண்டு. தமிழிசைச் சங்கத் தேவைகளைக் கவனித்துவிட்டு, சேப்பாக்கத்தில் உள்ள கிரிக்கெட் அசோசியேஷன் கட்டடத்துக்குப் போவார். காரியதரிசி என்ற முறையில் அங்குள்ள அலுவல்களைப் பார்த்து விட்டு வீடு திரும்ப மணி ஒன்பதாகும். சாப்பாட்டை முடித்துக் கொண்டு, மாலையில் வெளியாகும் ஆங்கில தினசரியை ஒரு வரி விடாமல் படித்து முடித்து விட்டுத்தான் படுக்கப் போவார். இது வழக்கம். ஆனால் பாதி நாட்கள் இவர் வெளியூர் பிரயாணம் போய் விடுவார்.

தமது தாயாரிடம் அளவிட முடியாத பக்தி. அந்த அம்மையாருக்குத் தம் மகனைப் போலவே, அவனுடைய நண்பர்களையும் நினைத்து மதிக்கும் பரந்த மனோபாவம். நண்பர்களினால்தான் தம் மகன் இன்று உயர்ந்திருக்கிறான் என்று நினைத்து நன்றி ஒளி வீசும் கண்களை உடையவர்.

இவர் முதல் தடவை இங்கிலாந்துக்குப் போய் விட்டுத் திரும்பியபோது நடந்த நிகழ்ச்சி எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. வீட்டு வாசற்படி ஏறும்போது அவருக்கு ஆரத்தி எடுக்கப் பெண்மணிகள் காத்திருந்தார்கள். ஸ்ரீராமன் நுழைந்தார். உடனே அவருடைய தாயார் உள்ளேயிருந்து, ''அவனை மாத்திரம் தனியாக நிறுத்தி ஆரத்தி எடுக்க வேண்டாம். அவனோட சிநேகிதாள் எல்லோரையும் கூட நிறுத்தி எடுங்கோ!'' என்று சொன்னார்.

நண்பர்கள்! நண்பர்கள்! எல்லோரும் இவருக்கு நண்பர்கள்தான். அதனால்தான் இவரால் பல காரியங்களைச் சாதித்துக் கொள்ள முடிகிறது. 1954ல் சென்னை கிரிக்கெட் சங்க நிதியில் 'பத்தாயிரம்தான் இருந்தது. ஒன்பது டெஸ்ட் பந்தயங்களை நாளடைவில் வெற்றிகரமாக நடத்தி முடித்தபிறகு, அந்த நிதி பத்து லட்சமாக உயர்ந்ததே! இது சாதனை இல்லையா?

ஒவ்வொரு டெஸ்ட் பந்தயம் நடந்து முடிந்ததும் நண்பர்களைக் கூப்பிடுவார். ஆளுக்குக் கொஞ்சம் பணம் போடுவார்கள். திருவல்லிக்கேணி பார்த்தசாரதி ஸ்வாமிக்கு அமர்க்களமாகத் திருமஞ்சனம் நடத்தி ஆனந்தப்படுவார்கள். வெள்ளிக் கிழமைகளில் பார்த்தசாரதி கோவிலுக்குக் கண்டிப்பாகப் போய் வரும் பழக்கம் இவருக்கு உண்டு. காலம் சென்ற 'விஜி' சென்னைக்கு வரும்போதெல்லாம் 'ஸ்ரீராம்காரு' என்று ஆசையோடு கூப்பிட்டுக் கொண்டு அதே கோவிலுக்குக் கிளம்பி விடுவார்!

இன்ன வேலையை இன்னாரால் செய்து முடிக்கலாம் என்ற நிர்ணயம் இவரிடம் உண்டு. இவருடைய வெற்றிக்கு அடிப்படையே அதுதான்! பெரிய லட்சியத்துக்காகச் சிறு விஷயங்களில் விட்டுக் கொடுக்கவும் தயங்க மாட்டார்.

சங்கீதப் பிரியர். நிறையக் கேட்க அவகாசம் கிடைப்பதில்லையே என்ற தாபம் உண்டு. திருவல்லிக்கேணி பார்த்தசாரதி ஸ்வாமி சபாவின் வளர்ச்சியிலும் இவருக்கு நிறையப் பங்கு உண்டு.

'சென்னை கிரிக்கெட் அபிமானிகள் விஷயம் தெரிந்தவர்கள். புள்ளி விவரங்களில் நிபுணர்கள். அயல்நாட்டு விளையாட்டுக்காரர்களின் விளையாட்டுத் திறமையை மனம் விட்டுப் பாராட்டக் கூடியவர்கள்' என்று உணர்ந்திருப்பதுடன் அதை அடிக்கடி கூறி மகிழ்வார்.

இந்த ஆண்டு இரண்டு வெளிநாட்டுக் கிரிக்கெட் கோஷ்டிகள் பாரதத்துக்கு வருவதை ஒட்டி ஸ்ரீராமனுக்கு ஓய்ச்சல் ஒழிவில்லாத வேலை. இங்கும் அங்கும் பறந்து கொண்டிருக்கிறார்!

''என்ன சார்! நம்ப பசங்க இப்படிக் கோட்டை விட்டுட்டாங்களே!'' என்று கேட்டாலும் ஸ்ரீராமன் ஒரு புன்சிரிப்புத்தான் சிரிப்பார்; ''நம்ப பசங்க 'கொன்னுட்டாங்க'' என்று சொன்னாலும் அதே புன்சிரிப்புத்தான்! நிதானமுள்ள மனிதர்!

பேட்டி: **கோமதிசுவாமிநாதன்**

## அத்தியாயம் 5

# தலையாட்டிப் பொம்மை

நீலகிரி என்ற பெயரை மாற்றிப் பச்சைகிரி என்று அழைக்கத் தூண்டும் அளவுக்கு மலைச் சரிவு முழுதும் குப்பல் குப்பலாகக் கிள்ளிவிடப்பட்ட தேயிலைச் செடிகள். இப்படி ஒரு மலையா இரண்டு மலைகளா, அடுத்தடுத்து நூற்றுக் கணக்கான மலைகளை இளம் பச்சை நிறத்திலும் கரும் பச்சை நிறத்திலும் தேயிலைச் செடிகள் அப்பிக் கொண்டிருந்தன. இளம் பச்சை நிறச் செடிகள், துளிர்களைத் தொழிலாளர்கள் கிள்ளக் காத்து நின்றன. கரும் பச்சை நிறத் தேயிலைச் செடிகள் துளிர் விடத் தொழிலாளர் காத்திருந்தனர்.

''ஒரு தேயிலைச் செடி சுமார் எத்தனை ஆண்டுகள் பயன் அளிக்கும்?'' என்று கேட்டாள் சாருலதா. ஜீப்பைச் சாரங்கன் ஓட்டி வர அவனுக்குப் பக்கத்தில் அவள் அமர்ந்திருந்தாள். ஒரு விநாடி பாதையை விட்டுப் பார்வையைத் திருப்பிச் சாருலதா மீது கண்ணோட்டம் செலுத்தினான் சாரங்கன்.

''உங்களுக்கு அப்புறம் மூன்று நான்கு தலைமுறைகளுக்குக் கவலை இல்லை, பாஸ்! வேரூன்றி விட்ட எந்தத் தேயிலைச் செடியும் பிடுங்கி எறிந்தால் ஒழிய, செத்துப் போய் இதுவரை நான் பார்த்ததில்லை. இது ஒரு ''ஃபார்வெர்'' செடி. நுனியில் கிள்ளிக் கொண்டே இருந்தால் நிரந்தரமாகத் துளிர் விட்டுக் கொண்டே இருக்கும்; டீ ஃபாக்டரி இயங்கிக் கொண்டேயிருக்கும். உங்களுக்குப் பணம் வந்துகொண்டே இருக்கும்!''

''அப்படி ஒன்றும் பிரமாதமாகப் புரட்டி விட்டதாகக் காணோமே? இந்த எஸ்டேட்டை வாங்குவதற்கு முன்னால் மூன்று வருஷத்திய 'பாலன்ஸ் ஷீட்'களைப் பார்த்தேன். விசேஷமாகச் சொல்லும்படியாக லாபம் ஒன்றும் இல்லையே!''

''அது அப்படித்தான் பாஸ்! முன்பெல்லாம் தேயிலைத் தோட்ட முதலாளிகள் தேயிலையை மட்டும் கவனித்தார்கள். லாபத்தில் குறியாக இருந்தார்கள். இப்போது தொழிலாளர் நலனிலும் நீங்கள் சட்டப்படி சிரத்தை காட்ட வேண்டியிருக்கிறது. இங்கு வேலை பார்க்கும் நூறு தொழிலாளர்களுக்கும் வீட்டு வசதி, பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி, நர்ஸரி, கோயில் குளம் அது இது என்று ஏகச் செலவு. போதாக்



சாருலதா

கி.ராஜேந்திரன்

குறைக்கு விதம்விதமான ரசாயன உரங்கள், பூச்சி மருந்துகள், செயற்கை மழை போல் நீரைப் பொழியும் கருவிகள் என்று எதையெதை யெல்லாமோ நம் தலையில் கட்டிப் பணத்தைப் பறித்துக் கொண்டு போய் விடுகிறார்கள். தேயிலைத் தோட்டங்களும் இப்போதெல்லாம் ஒன்றுக்குப் பத்தாகப் பெருகி விட்டன. ஆகவே, செலவினங்களுக்கு ஏற்பத் தேயிலையின் விலை ஏறவில்லை, பாஸ்!''

''சாரங்கன்! நீங்கள் என்னை 'பாஸ்' என்று கூப்பிடுவது எனக்குப் பிடிக்கவில்லை. சாரு என்றுதான் எல்லோரும் சொல்கிறார்கள். நீங்களும் அப்படியே அழைக்கலாம்.''

''ஓ. கே. சாரு!''

''பாஸ் என்று அழைக்காமலேயே நான் பாஸ் என்ற நினைவு உங்களுக்கு இருந்தால் போதும்!''

சாரங்கனுக்குக் குட்டுப் பட்ட உணர்ச்சியில் சட்டென்று கால் தடுமாறியது. விலகிச் சென்ற காலைப் பரபரப்புடன் மீண்டும் 'பிரேக்'மீது வைத்து அழுத்திக் காரை நிறுத்திய வேகத்தில் சாரு, முன்னாலிருந்த கண்ணாடியில் முட்டிக்கொள்ளாத குறையாகக் குலுங்கினாள்.

''ஸாரி சாரு! 'சார்' என்பதற்கும் 'சாரு' என்பதற்கும் அதிக வித்தியாசமில்லை. அதனால் உங்களை மரியாதைக்

குறைவாக அழைக்கும் எண்ணமும் ஏற்படவில்லை. பை தி வே, உங்களுக்குத் தேயிலை பறிப்பதைக் காட்டலாம் என்பதற்காக ஜீப்பை நிறுத்தினேன்'' என்று சொல்லி முடிப்பதற்குள்ளாகச் சாரு கீழே இறங்கிப் பாதை ஓரமாகப் போய் நின்றாள். சாரங்கன் பின் தொடர்ந்தான். சற்றுத் தொலைவில் மலைச் சரிவில் பதினைந்து பெண்கள் விறுவிறுவென்று இரு கைகளாலும் தேயிலைத் துளிர்களைக் கிள்ளிப் பின்னால் இருந்த கூடையில் திரும்பிப் பார்க்காமலேயே போட்டுக் கொண்டிருந்தார்கள். காயத்துக்குக் கட்டுப் போட்டது போல் நெற்றியைச் சுற்றிய ஒரு துணிப் பட்டையிலிருந்து பின்புறம் முதுகில் தொங்கிக் கொண்டிருந்தது கூடை. பட்டணத்திலிருந்து வந்த நவநாகரிகப் பெண் ஒருத்தியால் தாங்கள் உன்னிப்பாகக் கவனிக்கப்படுவதை உணர்ந்ததால் நாணத்துடன் புன்னகை புரிந்து கொண்டே, மானேஜரைக் கண்டதால் கும்பிடும் போட்டார்கள். பாதை ஓரமாக இருந்த செடியிலிருந்து ஒரு நுனியைப் பறித்துச் சாருலதாவுக்குக் காட்டினான் சாரங்கன். ''இரண்டு இலைகள் ஒரு இலை மொட்டு; — இதைத்தான் பறிக்க வேண்டும் அவர்கள். அதேசமயத்தில் இதனடியில் உள்ள இன்னொரு இலையையும் கிள்ளி எறிந்துவிட வேண்டும். அப்போதுதான் புதிதாக ஒரு துளிர் அங்கே கிளம்பும்.''



''ஒரு நாளைக்கு இவர்கள் எவ்வளவு தேயிலை பறிப்பார்கள்?''

''பறித்த தேயிலையின் எடை பார்த்துக் கூலி கொடுக்கிறோம். ஒரு நாளைக்குப் பத்து ரூபாய்க்குக் குறையாமல் சம்பாதித்து விடுவார்கள் இந்தப் பெண்கள்.''

'' கெட்டிக்காரிகள்தான் ; பார்த்தாலே தெரிகிறதே! எத்தனை சுறுசுறுப்பு! இதைச் செய்ய இயந்திரம் வந்து விட்டால் இன்னும் வேகமாக வேலை நடக்கும்.''

''இயந்திரமயமாதல் என்பது எத்தனையோ துறைகளில் புகுந்து விட்டாலும் நல்லவேளையாக இதொன்றை மட்டும் விட்டு வைத்திருக்கிறார்கள்.''

''அதுதான் இல்லை! ரஷ்யாவில் இயந்திரம் தேயிலை அறுவடைக்குப் பரீட்சார்த்தமாகப் பயன்படுகிறது!''

''இருக்கலாம். ஆனால் அவர்கள் அந்தச் சோதனையில் வெற்றி பெறுவார்களா என்பது சந்தேகம்! துளிர் எது முற்றிய இலை எது என்று இயந்திரத்துக்கு எப்படித் தெரியும்?''

''அது கருவியை உருவாக்கும் விஞ்ஞானி கவனிக்க வேண்டிய பிரச்னை. நமக்கு அந்தக் கவலை வேண்டாம்.''

''இவர்களும் இயந்திரமாகத்தான் இயங்குகிறார்கள். பத்து நாளைக்கு ஒரு முறை எல்லாத் தேயிலைச் செடிகளும் கிள்ளப்படுகின்றன.''

''வருஷக்கணக்கில் வாழும் என்று சொன்ன வாயால் இதைத் தேயிலைச் செடி என்றும் சொல்கிறீங்களே!''

''தப்புத்தான்; உண்மையில் இவை மரங்களேதான். சதா கிள்ளி விடப்பட்டுச் சின்னப் புதராகவே தோற்றம் அளிப்பதால் தேயிலைச் செடி என்று வழக்கில் வந்து விட்டது. நன்றாக வேரூன்றி ரொம்ப உறுதியாக இருக்கும். ஒரு சமயம் மலைச் சரிவில் இறங்கிவிட்ட காரைத் தேயிலைப் புதர் ஒன்று தாங்கிக் கொண்டதை நான் என் கண்ணால் பார்த்தேன். ஒரு குழந்தை உட்பட ஐந்து பேர்கள் உயிர் தப்பினார்கள்!''

''நிஜமாகவா? நம்பவே முடியவில்லையே?''

''வேணுமானால் ஜீப்பை இந்த மலைச் சரிவில் இறக்கிக் காட்டட்டுமா?''

சாரு சிரித்துக் கொண்டே ஜீப்பில் மீண்டும் ஏறினாள். ''ஜீப் எஸ்டேட்டுக்குச் சொந்தம். அது மலைச் சரிவில் உருண்டால் எனக்கு நஷ்டம்!'' என்றாள்.

''அப்படியானால் சரி, அது வேண்டாம். உங்கள் லாபத்தை அதிகமாக்க நான் மேற்கொண்டு வரும் முயற்சிகளைப் பார்க்கப் போவோம்!''



''இந்த எஸ்டேட்டில் இரண்டு நர்ஸரிகள். ஒன்று பெண் தொழிலாளிகள் தங்கள் குழந்தையை விட்டு விட்டு வேலைக்கு வர உதவுகிறது. மற்றொன்று இது.''

''புதிய தேயிலைக் கன்றுகளை இங்கே பயிராக்குகிறீர்களாக்கும்.''

''அதோடு தேயிலையின் தரத்தை அபிவிருத்தி செய்யும் வேலையும் நடக்கிறது.''

''தரம் என்றால்?.... அளவிலா, ருசியிலா?''

''இரண்டு விதமாகவும்தான்....மலைப் பிரதேசத்தில் மிக உயரமான சூழ்நிலைக்குப் போய் விட்டால் தேயிலை அறுவடையாகும் அளவு

''அதைச் சொல்லுங்கள், கேட்க இனிமையாக இருக்கிறது.''

சற்றுத் தூரம் போனபிறகு மலைச் சரிவுப் பாதையில் வண்டி நிற்க, மீண்டும் கீழே இறங்கினார்கள். உயரே இருந்தபடி மலைச் சரிவையும், பள்ளத்தாக்கையும் பார்த்தார்கள். படிப்படியாக அமைக்கப்பட்டிருந்த பாத்திகளில் 'பாலிதீன்' பைகளில் மண்ணும் எருவும் கலந்து வைத்து அவற்றில் தேயிலை நாற்றுக்களையும் ஊன்றி யிருந்தார்கள்.

குறைந்து போகும். மிகத் தாழ்வான இடத்தில் பயிராக்கினால் தேயிலையின் ருசி கெட்டுப் போகும். அதனால் பெரும்பாலான எஸ்டேட்டுகள் ஐயாயிரம் அல்லது ஆறாயிரம் அடி உயரத்தில்தான் அமைந்திருக்கும்.''

''ஸிலோனில் ஒர் ஆராய்ச்சி நடக்கிறது. உயரம் குறைந்த சூழ்நிலையில் வளரும்போதும் தேயிலையின் தரம் குறையாமல் இருக்கச் செடிக்கு ஒரு 'இன்ஜெக்ஷன்' போடுகிறார்கள்.''

''புதிதாக நீங்கள் வாங்கிய டீ எஸ்டேட்டைப் பார்க்க வரு முன்னர் தேயிலைத் தோட்டம் சம்பந்தமான ஏதோ ஒரு புத்தகத்தையும் புதிதாக வாங்கிப் படித்து விட்டு வந்திருக்கிறீர்கள் என்று புரிகிறது. ருஷ்யா ஆயிற்று, ஸிலோன் ஆயிற்று. அடுத்தது எந்தத் தேசம்?''

சாரு சிரித்துக் கொண்டே, ''இந்தத் தேசம்தான்; இங்கு நடக்கும் ஆராய்ச்சிதான். சொல்லுங்கள். இங்கே என்ன செய்கிறீர்கள்?'' என்றாள்.

''தேயிலைக் குருத்து ஒன்றைச் சரியான முறையில் வெட்டி நட்டால் அது வேர் விட்டுச் செடியாக வளரும். அல்லது விதைகளை ஊன்றியும் செடியைப் பயிராக்கலாம். எந்தத் தேயிலைச் செடியில் ருசி குன்றாது அதிகமான அறுவடையும் காண்கிறோமோ, அந்த ரகச் செடியைப் பலவாகப் பெருக்குவதில் சிரத்தை காட்டுகிறோம். இந்த உயர் ரகக் கன்றுகளைக் கொண்டு புதிய தேயிலைத் தோட்டங்களை உருவாக்கலாம்; அல்லது ஏற்கனவே உள்ள மட்ட ரகத் தோட்டப் பகுதியை அழித்து விட்டு அந்த இடத்தில் இதைப் பயிர் செய்யலாம்.''

''புதிய தேயிலைத் தோட்டம் உருவாக்கலாம் என்றீர்களே; இப்போது நம் எஸ்டேட்டில் எத்தனை ஏக்கரில் தேயிலை பயிராகி யிருக்கிறது?''

''மொத்தம் உள்ள தொள்ளாயிரம் ஏக்கர் பரப்பில் நானூறு ஏக்கர் பயிராகி யிருக்கிறது. பாக்கியெல்லாம் காடாகத்தான் இருக்கிறது. அதில் இன்னும் ஒரு நூறு ஏக்கரில் தேயிலைப் பயிர் செய்ய உத்தேசம். காட்டை அழிக்க அனுமதி கோரிச் சர்க்காருக்கு எழுதினேன். கிணற்றில் கல்லைப் போட்டாற் போல் இருக்கிறார்கள். சென்னைக்கு நான் நேரில் வந்துதான் ஃபைலைத் தேடி எடுத்துக் கொடுத்துக் கவனிக்கச் சொல்ல வேண்டும்.''

''நமக்குச் சொந்தமான காட்டை அழிக்க நாம் அனுமதி பெற வேண்டுமா?''













''காட்டுக்கு மட்டுமென்ன? தேயிலைத் தோட்டத்தில் ஆங்காங்கே நிழல் தர மரங்கள் வளர்க்கிறோமே; அவற்றின் கிளைகளை வெட்டக்கூடப் 'பர்மிஷன்' வாங்க வேண்டும். ரொம்ப அடர்த்தியாக வளர்ந்து நிழல் அதிகமாகி விட்டாலும் தேயிலைக்கு நல்லதில்லையே!''

''அர்த்தமற்ற சட்டங்கள்; அபத்தமான கட்டுப்பாடுகள்.''

# தியாகச் சுடர்



1962ல் பாரதத்தின் மீது படையெடுத்த சீனர்களுடன் போரிடுகையில் எதிரிகளின் கண்ணிவெடி ஒன்று வெடித்ததன் விளைவாக காப்டன் பங்கஜ் ஜோஷி என்ற பாரத ராணுவ அதிகாரி படுகாயமுற்றார். அவருடைய கால்களில் ஒன்றினை வெட்டி எடுக்கும்படி நேரிட்டது. மற்றொரு காலில் பாதத்தின் அடிப்பாகம் அறுவைச் சிகிச்சைக்கு உள்ளாகியது. ராணுவ சேவையிலிருந்து விடுதலை பெற்ற காப்டன் ஜோஷி கடந்த ஆறு ஆண்டுகளாக வாழ்க்கையில் எவ்வித உற்சாகமும் இன்றி வாழாமல் வாழ்ந்து கொண்டிருந்தார்.

சிறிது காலத்துக்கு முன்பு அவர் சற்றும் எதிர்பாராத, கனவுகூடக் கண்டிருக்க முடியாத ஒரு சம்பவம் நிகழ்ந்தது. இருள் கவிந்திருந்த அவரது வாழ்க்கையில் ஒளி வீசியது! 'ரோஹிணி' என்ற மராத்தி மாத இதழில் அதன் ஆசிரியர் ஓர் அறிவிப்புச் செய்தார். 'படித்த பெண் யாராவது காப்டன் ஜோஷியை மணக்க முன்வருவாளா?' என்பதே அவ்வறிக்கை. பம்பாய் பல்கலைக் கழகத்தில் பயின்று பட்டம் பெற்ற அழகிய யுவதி முக்தா காலே காப்டன் ஜோஷியைத் தான் மணக்க விரும்புவதாக 'ரோஹிணி'யின் ஆசிரியருக்கு எழுதினாள். பம்பாயில் வசிக்கும் நடுத்தரக் குடும்பத்தைச் சேர்ந்த யுவதி முக்தாவுக்கும் காப்டன் ஜோஷிக்கும் புனாவில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. நகரத்தின் பிரமுகர்கள் பலரும் திருமணத்துக்கு வந்து தம்பதியை வாழ்த்தினர். அவர்களுள் ஒருவர் கேட்ட கேள்விக்கு மணமகள் முக்தா பதில் கூறினாள்: ''தாய்த் திருநாட்டைக் காக்கும் பணியில் போர்க்களத்தில் ரத்தம் சிந்திய பங்கஜ் ஜோஷியின் பொருட்டு எதைத்தான் செய்யக்கூடாது?''

வி.எல். லாக்டன்கர்
தமிழில்: ரா. பா.

---

''அப்படி ஒரேயடியாக அர்த்தமற்றது என்றும் சொல்லி விட முடியாது. மனிதன் தன் சுயநலத்துக்காகக் காட்டையெல்லாம் வெட்டிவிட்டால் மிருகங்கள் எங்கே போகும்? மழை எப்படிப் பெய்யும்? சட்டம் வேண்டியதுதான். ஆனால் அதை அமுல்படுத்தும் முறையில் 'காமன் ஸென்ஸ்' தேவை. அதுக்குத்தான் பஞ்சம்.''

பேசிக் கொண்டே ஜீப்பில் ஏறினார்கள். ''நான் வீட்டுக்குத் திரும்புகிறேன். விருந்தினரைக் கவனிக்க வேண்டும்'' என்றாள் சாருலதா.

எஸ்டேட் பங்களாவை நோக்கி ஜீப்பைச் செலுத்தியபடியே, ''இங்குள்ள தொழிலாளர்களுக்குச் சாமி கும்பிட ஒரு கோயில் வேணுமாம். சின்னதாகக் கட்டித் தந்தால் போதும்'' என்றான் சாரங்கன்.

''என்ன செலவாகும்?''

''பதினையாயிரம் ஆகலாம்.''

''இங்கே என்ன ஹிந்துக்கள் மட்டும் தான் வேலை செய்கிறார்களா?''

''இல்லை; கிறிஸ்துவர்களும் உண்டு.''

''எஸ்டேட்டில் சர்ச் இருக்கிறதா?''

''கிடையாது.''

''அப்படியானால் சிறியதாக ஒரு மாதா கோயிலையும் கட்டி விடுங்களேன். இரண்டுக்குமாகச் சேர்த்து இருபது அல்லது இருபத்தைந்துக்குள் முடிக்கப் பாருங்கள்.''

சாரங்கன் ஜீப்பில் பின்புற ஆசனத்தின் மீது கிடந்த சிறிய தோல் பெட்டியை எடுத்தான். ஜீப்பை ஓட்டியபடியே லாகவமாக அதைத் திறந்து அதனுள்ளிருந்த கருவியில் ஸ்விச்சைப் போட்டுவிட்டுப் பேசத் தொடங்கினான்: ''தொழிலாளர்களுக்கு மாதா கோயில், முருகன் கோயில் இரண்டும் கட்டலாம். அதிகபட்ச 'பட்ஜெட்' இருபத்தையாயிரம்'' என்று கூறிப் பிறகு ஸ்விச்சை அணைத்தான்.

''உங்கள் குரலையே கேட்பதில் உங்களுக்கு ரொம்பப் பிரியம் போலிருக்கிறது'' என்றாள் சாரு. ''டேப் ரிகார்டர்தானே அது?''

''ஆமாம். சௌகரியமாக இருக்கிறது. எதையும் மறப்பதற்கில்லை. எண்ணங்கள் உடனுக்குடன் பதிவாகி விடுகின்றன. சிங்கப்பூரிலிருந்து ஒரு 'ஃபிரெண்ட்' கொண்டு வந்தான். டிரான்ஸ்ஸிஸ்டரைஸ்ட். பாட்டரியில் இயங்குகிறது.''

''ரோஸ்மேரி டீ எஸ்டேட் என்ற பெயர் எனக்குப் பிடிக்கவில்லை.''

''மாற்றி விடுவோம்.''

'''சாருலதா எஸ்டேட்ஸ்' என்று இருக்கட்டும்.''

சாரங்கன் அதையும் பதிவு செய்து கொண்டான். ''பெயர்ப் பலகையை மாற்றினால் மட்டும் போதாது. ரிஜிஸ்திராருக்குச் சொல்லி ரிகார்டுகளில் பெயர் மாற்றம் செய்ய வேண்டும். 'லெட்டர் ஹெட்'டுகள் வேறு அச்சிட வேண்டும். பிஸினஸ் தொடர்புள்ளவர்களுக்குப் பெயர் மாற்றத்தை அறிவித்து அச்சடித்த கடிதம் கையெழுத்துப் போட்டு அனுப்ப வேண்டும்'' என்று உடனுக்குடன் தோன்றிய எண்ணங்களையெல்லாம் அந்த டேப்ரிகார்டரில் பதிவு செய்து கொண்டான்.

''சாரங்கன், ஐ லைக் திஸ்! ஏன், எதற்கு என்றெல்லாம் கேட்டுக்கொண்டிருக்காமல் ஒரு காரியத்தைச் சொன்னதும், மேற்கொண்டு அது சம்பந்த

மாய்ச் செய்ய வேண்டியது பற்றி யோசிக்கிறீர்களே!''

''ஐ ஆம் எ மேன் ஆப் ஆக்ஷன்!'' என்றான் சாரங்கன். ''ஒன்றுமில்லாத விஷயத்தை எட்டு மணி நேரம் யோசித்துப் பொழுதைக் கழிப்பது எனக்குப் பிடிக்காது. நீங்கள் என் யோசனையைக் கேட்டால் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். உத்தரவு போட்டால் தலையாட்டிவிட்டுப் போவ தில் எனக்கென்ன நஷ்டம்? பொறுப்பு உங்களுடையதாகி விடுகிறதே!''

சாரு மேலும் சில கட்டளைகளைப் பிறப் பித்தாள். எல்லாம் டேப்ரிகார்டரில் பதிவாயின. பங்களாவை நெருங்குகை யில் ''நீங்கள் சென்னைக்கு வரும்போது என்னை வந்து பாருங்கள்'' என்றாள்.

''ஆபீஸிலா? வீட்டிலா?''

''ஆபீஸில். சாருலதா என்டர் பிரைஸஸ்...''

''எனக்குத் தெரியும். மவுண்ட் ரோட்டில் சாருலதா பில்டிங்ஸில் எட் டாவது மாடி.''

''ஃபோன் செய்துவிட்டு வாருங்கள்.''

''ஓ. கே!'' சாரங்கன் இதையும் டேப் ரிகார்டரில் பதிவு செய்துகொள் ளத் தவறவில்லை.

பங்களா எதிரே ஜீப் நின்றது. சாரு லதா இறங்கிக் கொண்டாள். ''சாப் பிட்டுவிட்டுப் போகிறீர்களா?''

''பட்லர் மோகனின் சமையல் பிர மாதமாக இருக்கும். ஆனால் எனக்கு வேலை இருக்கிறது. ஆபீஸ் அறையில் பதினைந்து நிமிஷத்தில் சாப்பாட்டை முடித்துக் கொண்டு காரியத்தில் இறங்கு வேன். இங்கே உங்கள் 'கெஸ்ட்'களுடன் சேர்ந்து சாப்பிடுவதென்றால் இரண்டு மணி நேரம் 'வேஸ்ட்' ஆகும். வேலை யைக் கவனிக்காமல் நான் நேரத்தை வீணாக்குவது உங்களுக்குப் பிடிக்காது.''

''ரொம்ப கரெக்ட்'' என்றாள் சாரு. ''சாரங்கன்! பர்ஸனல் விஷயம் ஒன்று உங்களிடம் சொல்லலாமா?''

அவன் மனத்தில் ஆவல் கொப் புளித்தது. ''பேஷாக'' என்றான்.

''உங்கள் கன்னத்தில் இரண்டு பக்கமும் தூண்கள் போல் நிற்கிறதே, கிருதா, அதைப் பார்க்கச் சகிக்கலை, எடுத்து விடுங்கள்!''

சட்டென்று சாரங்கனின் முகம் சிவந்து கோபத்தால் கண்கள் அகன்றன. புருவங்களைச் சுருக்கியபடி சாருலதாவின் முகத்தைப் பார்த்தான். அவள் சிறிதும் சஞ்சலமின்றி அமைதியாக இமைகளைக் கூடக் கொட்டாமல் அவனை ஏறிட்டு நோக்கினாள். அவளுடைய கம்பீர சௌந்தரியம் அவன் கண்கள் வழியே புகுந்து மனத்தில் பொங்கிய சீற்றத்தை



படத்தில் காட்டியிருக்கும் அமைப்பினை உங் களது பேனாவால் நிறுத்தாமலும், போன வந்த திசையிலே அதற்கு எதிராகப் போகாமலும் ஒரே கோட்டின் உதவியால் வரைய முடியுமா?

விடை: 48ம் பக்கம் பார்க்க.

அப்படியே தன் இனிமையில் கரைத்து விட்டது. கோபம் பொங்கிய முகத்தில் புன்னகை அரும்பியது.

''தாங்க்யூ'' என்றான். ஜீப் கிளம் பியது. ''மறந்துவிடப் போகிறீர்கள், அதையும் ரிகார்டரில் பதிவு செய்து கொள்ளுங்கள்'' என்று சொல்லி உல் லாசமாகச் சிரித்தபடியே 'டாட்டா' காண்பித்தாள் சாருலதா.

பங்களாவை நெருங்கியதும் வாச லில் இருந்த பணியாளிடம் பட் லரை உடனே அழைத்து வரச் சொன் னாள். அவன் வந்ததும் ''மோகன்! இன்றைக்கு என்ன ஸ்பெஷலாச் செய் திருக்கியோ அதில் கொஞ்சம் டிபன் காரியரில் வைத்து மானேஜருக்கு நீயே கொண்டு போய்க் கொடு. வீட்டி லிருந்து அவருக்குச் சாப்பாடு வருவ தற்கு முன்பே நீ அவர் ஆபீஸ் அறைக் குப் போய்விட வேண்டும். புரிந்ததா?'' என்றாள்.

''சரிம்மா'' என்று தலையசைத்தான் மோகன்.

''எஸ்டேட் ஆபீஸ் எவ்வளவு தூரத் தில் இருக்கிறது?''

''அரை மைல் இருக்கும்.''

''அப்படியானால் ஒரு காரை எடுத் துக்கொண்டு போ. நடந்து போனால் எல்லாம் ஆறிப் போய்விடும்.''

''ஆகட்டும்.''

சற்று நேரத்துக்குப் பின் மோகன் டிபன் காரியருடன் சாரங்கனின் ஆபீஸ் அறைக்குள் நுழைந்தபோது, சாரங்கன் மேஜை மேலிருந்த பைல்களை யெல்லாம் ஒரு புறமாய் ஒதுக்கிவிட்டு நடுவே நிலைக் கண்ணாடியை வைத்து அந்த வேளை கெட்ட வேளையில் எலெக்ட்ரிக் ஷேவ ரால் முக க்ஷவரம் செய்து கொண்டிருப் பதைப் பார்த்து வியந்தான். **(தொடரும்)**

இன்றே செய்யக்கூடியதை
நாளைக்கென்று
தள்ளி வைப்பானேன்?

# காலத்தே செய்க



நாளைக்கு நீங்கள் மறந்து விடக் கூடும். மறதி சில சமயங்களில் நஷ்டம் விளைவிக்கக்கூடும். உதாரணமாக, இன்ஷூரன்சு உரிமைப் பணம் கிடைப்பதில் தாமதம் ஏற்படக்கூடும். பின்வரும் விவரங்கள் இல்லாததனால் ஆண்டுதோறும் பலருக்கு உரிமைத்தொகைகளை உடனடியாகக் கொடுக்க முடியாமல் போய்விடுகிறது. • வயதுக்கு சான்று • முகவரி மாற்றம் • பயனடைபவரின் பெயர் • எனவே, முன்னெச்சரிக்கையாக இருப்பது நலமல்லவா? அவ்வப்போது உங்களுடைய இன்ஷூரன்சு பாலிசியைச் சரிபார்த்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு மாதமும் சரியான அலுவலகத்தில் உரிய சமயத்தில் உங்கள் பிரீமியத்தைக் கட்ட மறக்காதீர்கள்.

MAY 1969





ஆயுள் இன்ஷூரன்சுபோல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை




என் மனத்தில் உற்சாகம் பொங்கியது.

மாலை நேர சுகந்தத்தைக் கடற்கரையில் அநுபவிக்கும் ஆனந்தம் வேறெங்கு உண்டு? எத்தனை எதிரினைச் சிட்டுக்கள்! எத்தனை வண்ண மலர்க் கூட்டங்கள்! அந்த நேரத்தின் இனிமைக்கே காரணமானவர்களல்லவா இந்த இளம் பெண்கள்!

காரின் இருபுறமும் விரைந்து செல்லும் வீதிகள், வீடுகள், கடைத் தெருக்கள், கோயில்கள், மனித இரைச்சல்கள். மேயும் கண்கள் ஊடுருவிக் காணும் இளமங்கையரின் உருவங்கள்.

தட்டென்று என் பார்வை நிலைத்தது. பஸ் நிறுத்தத்தில் நின்று கொண்டிருந்தாள் கீதா!

ரோஜா வண்ணத்தில் சேலையும், சோளியும். தழையத் தழையப் பின்னிய கூந்தலின் நுனியில் ரப்பர் வளையம். மிகையில்லாத அலங்காரம். கையில் சின்ன டப்பாப் பை. வெகு நேரமாகப் பரபரப்பாக பஸ்ஸுக்காக நின்று களைத்துப் போன தோற்றம். ஆனால் அந்தக் களைப்புக்கூட அவள் அழகை அதிகப்படுத்தியது போல் ஒரு கவர்ச்சி.

நான் காரை அவளருகே நிறுத்தியதுதான் தாமதம். அவளே காரருகில் ஓடி வந்தாள். இதை நான் எதிர்பார்க்கவில்லைதான். பழக நேர்ந்த ஓரிரு சந்தர்ப்பத்தில் என் பேச்சுக்களால் முகம் கவிழ்ந்தவள் அவள்.

''ராமன் நீங்கள் கடற்கரைக்குத் தானே போகிறீர்கள்? என்னைக் கொஞ்சம் பைகிராப்ட்ஸ் ரோடில் விட முடியுமா?''

அவள் பார்வைக்கும் குரலின் கெஞ்சலுக்கும் நான் சரி என்பதைத் தவிர வேறு என்ன பதில் கூறியிருக்க முடியும்?

அவள் கார்க் கதவைத் திறந்து கொண்டு பின்புற சீட்டில் அமர்ந்தாள். ''நல்ல சமயத்துக்கு வந்தீர்கள்!''

எனக்கும்கூட இது நல்ல சமயம்தான். கார்க் கண்ணாடி வழியாக அவள் முக பாவத்தையும், அக பாவத்தையும் நோட்டமிட்டேன். பறந்து கொண்டு வந்த என் கார் இப்போது நிதான வேகத்தில் சாதுப் பிள்ளையாகப் போய்க் கொண்டிருந்தது. பின்னே கீதாவைச் சட்டென்று அவள் சொல்லுமிடத்தில் இறக்கி விட்டால் என்னைப் போல் பைத்தியக்காரன் வேறு யார் இருக்க முடியும்?

''இன்னிக்கு வீட்டிலே என்ன கீதா, விசேஷம்?''

''அம்மா சீக்கிரம் வரச் சொன்னாள்!''

''அவ்வளவுதானே? உனக்கு உதவ இப்படியொரு சந்தர்ப்பம் கிடைச்சதிலே ரொம்ப சந்தோஷம். அதைப் பகிர்ந்து கொள்ள எனக்காக ஒரு கால் மணி நேரம் ஒதுக்குவாயா?''

''என்ன சொல்றீங்க நீங்க?''

''மிரளாதே, கீதா. ஒரு ஸ்வீட், ஒரு காரம், ஒரு காப்பி. அதற்குக் கால் மணி நேரம் போதும்!''

அவள் பதிலை எதிர்பார்க்காமலேயே என் கார் ஹோட்டலுக்குள் நுழைந்தது. அவள் தயக்கம் பின்ன என்னைத் தொடர்ந்தாள்.

குடும்ப அறையில் எதிர் எதிர் நாற்காலிகளில் இருவரும் அமர்ந்தோம். என் பார்வை சுதந்திரமாக அவள் மீது கவிந்தது. அவள் தர்மசங்கடமான தவிப்போடு தலை குனிந்தவாறே விரலிலிருந்த மோதிரத்துக்கு 'பாலிஷ்' போட்டுக் கொண்டிருந்தாள்.

''கீதா!''

அவள் நிமிர்ந்தாள்.

''பெண்களிலே நீ தனி ரகம்தான். உன் அழகு, உன் குணம், உன் பழகும் முறை எல்லாமே எனக்குப் புதுமையாகத் தோன்றுகின்றன!''

அவள் இலேசாகச் சிரிக்க முயன்றாள். ''இன்னும் சர்வரைக் காணலையே?''

''சர்வர்தானே? நம்மிருவரின் வயதைக் கணித்து விட்டு நிறைய 'டைம் லிமிட்' கொடுத்திருப்பான்!''

''எனக்குச் சீக்கிரம் போக வேண்டுமே?''

''போகலாமே!'' என்ற நான் சட்டென என் குரலைத் தாழ்த்திக் கொண்டு கூறினேன். ''உன்னோடு தனிமையில் பேச ஒரு சந்தர்ப்பம் கிடைக்குமா என்று எத்தனை நாளாகக் காத்திருந்தேன், தெரியுமா?''

அவளது சாந்தமான முகத்தில் ஒரு கடுமை. ''என்னுடனா?'' என்று சீற்றமும் ஏளனமுமாகக் கேட்டாள்.

''ஆமாம், கீதா!'' எனக்கே ஏற்பட்ட நடிப்புக் குரலில் உருக்கமான முறையில் கூறினேன்.

''பிரமீளாவிடம் கூட இப்படித்தான் சொன்னீர்களாம்! எனக்கு உங்களைப் பற்றித் தெரியாது என்று எண்ண வேண்டாம்!''

அவள் குரலின் ஏகத்தாளத்தில் நான் சோர்ந்துவிட வில்லை. இந்த மாதிரி வேளை இனி வாய்க்குமோ என்னவோ?

''கீதா! கோபத்தில்கூட உன் முகம் ரத்தினமாக ஜொலிக்கிறது!'' அவளுடைய சந்தன நிறக் கைகளைப் பற்றி இறைஞ்சுவது போல் பார்த்தேன்.

என் கைகளை உதறிக் கொண்டு விருட்டென எழுந்து நின்றாள் அவள். ''சீ! என்னிடம்கூட இப்படி நடந்து கொள்வீர்கள் என்று நான் நினைக்கவே இல்லை. போதும், உங்கள் சகவாசம்! உங்களைப் பற்றி எல்லாம் தெரிந்தும்கூட இன்று ஏன் ஒரு 'லிப்ட்' கேட்டேன் தெரியுமா? இன்று என்னைப் பெண் பார்க்க வருகிறார்கள். அந்த நேரத்துக்குப் போக முடியவில்லையே என்ற தவிப்பில் உங்கள் காரில் ஏறினேன். நீங்கள் ஹோட்டலுக்கு அழைக்கும் போதும் தாட்சிண்யம் தட்டாமல் வந்தேன். அதற்கு நல்ல பரிசு! எத்தனை கேவலம்!''



45-ம் பக்கத்தில் வெளியாகியுள்ள புதிருக்கு விடை:
அனுப்பியவர் : ஞானசிரோமணி ராமலிங்கம்.
ஆதாரம் : மேதமெடிகல் பஸில்ஸ்.

---

அந்த நேரம் பார்த்துச் சர்வர் சிற்றுண்டிகளை ஏந்தி வந்து மேசை மீது பரத்தி விட்டுப் போனான்.

அது வரை மௌனமாக நின்றவளைப் பார்த்த நான், "தாட்சிண்யம் தட்டாமல் வந்ததற்குத் நன்றி கீதா ! உட்கார்ந்து சாப்பிடு. சீக்கிரம் புறப்படலாம். ஆனால் ஒன்று தெரிந்து கொள். என்றாவது ஒரு நாள் என் அன்பை நீ உணர்ந்து கொள்வாய் !"

அவள் மறுபடியும் சீறினாள். "அன்பு ! நீங்கள் ஒவ்வொரு பெண்ணிடமும் இப்படிப் பேசுவதற்குப் பெயரா அன்பு? உங்களை நம்பியும் ஒருத்தி வருவாள். தூய்மையான அன்பு நெறியோடு உங்களைத் தொழுதெழுவாள். அவளுக்காக நீங்கள் காத்திருக்கக் கூடாதா?"

"எனக்குப் புத்தி சொல்கிறாயா, கீதா ?"

"ஏன்! சொல்லக் கூடாதா? புத்தி கூற வயது வேண்டாம். விவேகம்தான் வேண்டும். 'ஒழுக்கம்'ங்கிறது வாழ்க்கைக்கு ரொம்ப முக்கியமானது மிஸ்டர் ராமன். அதிலே நம்பிக்கையில்லேன்னா குறைந்த பட்சம் ராமன்ங்கிற பெயரையாவது மாற்றி வைத்துக் கொள்ளுங்கள் !"

மூச்சு முட்டப் பேசிவிட்டுக் கீதா அறைக் கதவைத் தள்ளிக் கொண்டு ஓட்டமாக ஓடினாள்.

'வெளியே எத்தனை பேர் பார்ப்பார்கள் ? எத்தனை அவமானம் எனக்கு? இவளைச் சும்மா விடுவதா ?' கறுவியவாறே காரை ஓட்டினேன்.

ஆசையின் ஏமாற்றம் பெருமூச்சின் பேரலைகளாய் என்னுள் கொந்தளித்தது. இதுவரை பழக நேர்ந்த ஒருத்தியாவது என்னை இத்தனை அவமானப்படுத்தியிருப்பாளா ?

ஆனால் கீதா கூறிய உண்மை !

எனக்காக எங்கோ காத்திருக்கும் பெண். அவளைப் பற்றிய மானசிகக் கனவுகூட என்னிடம் இதுவரை ஏற்பட்டதில்லை. நிகழ்கால நடப்பை விட்டு எதிர்காலக் கனவு காண்பது மடத்தனம் என்று ஒதுக்கியவன் நான். இந்தக் கீதாவின் மனத்தில் எனக்கு இடமில்லை. அவள் வரப் போகும் கணவனுக்காகத் தன்னைப் புனிதமாகப் போற்றிப் பாதுகாத்து வருகிறாள்! அந்த அன்பின் பக்தியில் ஆலய விளக்கின் புனிதம் தெரிவது உண்மைதான். நான் இது வரை பழக நேர்ந்த பெண்கள் எல்லாம் என்னை ஒத்தவர்கள். தன்னைக் காத்துக் கொண்டு தன் மணாளனுக்குக் காத்துக் கிடக்காதவர்கள்.

ஆயினும்...... !

உயரத்திலிருந்து விழும் நீரில் ஒரு சொட்டு சில்லுச்சில்லாகத் தெறிப்பது போல் மனத்தின் சபல உணர்வுகள் தெறித்தன. நான் என்னுள்ளே விம்மினேன், கதறினேன். 'சீ ! நான் இத்தனை நாள் வாழ்ந்ததும் ஒரு வாழ்வா ? ராமன் என் பெயர் ! எத்தனை அழகாகச் சொன்னாள் கீதா! ஒழுக்கத்தில் நம்பிக்கையில்லாவிட்டால் குறைந்தபட்சம் பெயரையாவது மாற்றிக் கொள்ளும்படி ! அந்த ஏகபத்தினி விரதனின் பெயரா எனக்கு? கூடாதுதான்!'

செல்வச் செருக்கும் அழகின் ஆணவமும் என்னை மமதைச் சேற்றில் புதைத்துவிட்டன இத்தனை நாட்களும் ! இதற்கு மீட்சி ? என்னை நானே உணர ஆரம்பிக்கும் வேளையில் துயரம் சூழ்ந்தது. இந்தத் துயரத்துக்கு மாற்று ஏது? பெரிய உண்மைகளை எண்ணிப் பார்க்கா விட்டாலும், சிறிய உண்மைகளையு மல்லவா புறக்கணித்தேன்? தனக்குள்ளேயே வாழ்வின் துணையாக வரப் போகிறவளை நினைத்து மலர வேண்டிய மகிழ்ச்சியை ஏற்காமல் விலை கொடுத்து வாங்கும் இனிமையில் சொக்கி நின்றேனே !

அன்று வீட்டுக்கு யார் யாரோ வந்து விட்டுப் போனார்கள். எதிலுமே ஈடுபாடின்றி வீட்டுப் பூனையாகிப் போன நான் வழக்கம் போல் புத்தகத்தை விரித்தேன்.

எடுத்த எடுப்பிலேயே அம்மா என்னருகே வந்து நின்று என் முகம் நோக்கி அழாமல் அழுது கூறினாள்: "ஒரே பிள்ளைடா நீ! நம் வம்சம் தழைக்க வேண்டாமா ?"

'என்னை மணக்கவும் ஒருத்தியா? அப்புறம் உண்மையை உணர்ந்தாளானால்....? ஒரு பெண்ணின் வாழ்வை என்னுடன் இணைத்துக் கொள்ள எனக்கு யோக்யதை ஏது?' நான் உள்ளுக்குள் தேம்பினேன்.

"நான் விரும்பாத எதையும் திணிக்காதீர்கள் !" என்று மறுத்தேன்.

அம்மாவின் அழுகை, பட்டினி, சத்தியாக்கிரகம்.

அப்பாவின் கோபம், விரக்தி, வேதனை.

இவற்றுக்கு இறுதியில் நான் மசிந்து மண்டியிட்டேன். "உங்கள் விருப்பம் இனி!"

இவை மந்திரச் சொற்களா என்ன?

எத்தனை சுறுசுறுப்பு இல்லத்தில். அம்மாவின் முகத்தில் பூரிப்பு, உற்சாகம். அப்பாவின் முகத்தில் ஸ்தைரியம், தெளிவு. நானோ உள்ளுக்குள் புரையோடினாற்போல் குன்றிக் கிடந்தேன்.

"பெண் பார்க்கப் புறப்படு ராஜா ! இன்று நல்ல நாள்!"

"நான் எங்கேயும் வரப் போவதில்லை !"

என் வீம்புப் பதிலால் கலங்கிப் போன அம்மா பதறியவாறு கேட்டாள்: "ராஜா! எல்லா ஏற்பாடுகளும் பண்ணிட்டோம்.



அடேயப்பா, வளர்ச்சியின் உச்ச தசை!
இப்படியொரு மகத்தான மாறுதலை
விளைவிக்கமுடியுமா ஒரு டானிக்?



# ஆம், வளர்ச்சிக்கான பசியை உங்கள் குழந்தைக்கு வளமுடன் வழங்குவது இன்க்ரிமின்*

இன்க்ரிமின் டானிக் பிரத்தியேகமாகப் பசியைத் தூண்டி, வயிறார உண்ணும் மிகுதியான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றி, வாட்டசாட்டமாக வலுவோங்கச் செய்கிறது. சாப்பிடும் புரத சத்து அனைத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ள உதவுகிறது இன்க்ரிமின். நம் உணவில் இல்லாத ஒரு முக்கிய அமினோ அமிலம் செறிந்துள்ள டானிக். வளரும் வயதினிலே (4 வாரம் முதல் 14 வயது வரை) அன்றாடம் கொடுங்கள் ! செர்ரிப் பழச் சுவை ததும்பும் இன்க்ரிமின். மறவாதீர்கள் !

## இதுவே கண்கண்ட வளர்ச்சிப் பருவம், இன்க்ரிமின்* பருவம்

◀ பெரிய குழந்தைகளுக்கு (இரும்புச் சத்து அடங்கிய) இன்க்ரிமின் ஸிரப்

இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ்









Lederle

எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன. உலகெங்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு பெயராகிய லெடர்லீ தயாரிப்பது இன்க்ரிமின். லெடர்லி டிவிஷன், ஸயானமிட் இந்தியா லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 6577, பம்பாய்-18.

*அமெரிக்கன் ஸயானமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

விண்டாஸ்-INCA-140/TA

நானும் உங்கப்பாவும் மட்டும் போய்ப் பெண்ணைப் பார்த்துட்டு வந்தாப் போதுமா?''

''அதுதான் சொல்லி விட்டேனே! உங்க இஷ்டப்படி செய்யுங்க.''

நான் சமாதானமான ஆறுதல் கூறினேன்.

''சரிடா, ராஜா!''

பிரத்தியட்ச வாழ்வில், நான் உள்ளத்தை விற்று வாழத் துணிந்த நாட்கள்.... அந்த வாழ்வில் கீதா மட்டும் எதிர்ப்படவில்லை என்றால்? என் மனக் குருட்டைத் திறந்து விட்ட அவள் எத்தனை அழகாகச் சொன்னாள்? 'என்னைப் புனிதமாக அர்ப்பணிக்கக் காத்திருக்கவில்லை' என்று சாடினாளே...; எத்தனை உண்மை அது! என் குடும்பச் சூழ்நிலையே என்னைப் புனிதமாக வைத்திருக்க வேண்டிய ஒன்றாயிற்றே!

என் கண்ணெதிரே வீட்டிலே சிறு வயதிலேயே விதவையாகியும், கைம்மை நோன்பில் பழுதில்லாமல் தெய்வத்துக்கு அர்ப்பணமான மலராகத் தூய்மை நெறியுடன் அத்தை வாழ வில்லையா? கணவனால் ஒதுக்கப்பட்டுத் தனித்து வாழ்ந்தும், தெய்வ நினைவிலும் ஆராதனையிலும் தன் மனத்தை நிலைநாட்டிப் பெரியம்மா வாழவில்லையா? புடமிட்ட பொன்னாகக் குடும்பத் துயர்களைச் சமாளித்து வாழும் அம்மா. தூய்மை நெறியிலும் தர்மத்திலும் சிறிதும் பிறழாத அப்பா! இந்தக் குடும்பத்திலா நான் பிறந்தேன்? இதெல்லாம் மனத்தைக் கட்டும் பாடமாக அமையவில்லையே, ஏன்? புத்தகப் புழுவான நான் படித்த புராணங்கள், வாழ்க்கை வரலாறுகள், மகான்களின் சரித்திரங்கள் எல்லாம் எனக்கு வழிகாட்டியாகவில்லையே, ஏன்?

ஒவ்வொருவரின் ஜீவிய நடமும் மற்றவருக்கு வழிகாட்டியாக இருக்கும் பட்சத்தில் இன்று எல்லோருமே யோக்கியர்களாக இருப்பார்கள்! எல்லாம் அறிந்திருந்தும் அவ்வழி நடப்பதுதான் அவரவர் விதியோ?

மேளச் சத்தம். சந்தோஷக் கூச்சல்கள். ஆர்வமுடன் குழுமிய கூட்டம். இதோ, கண்கள் பாதங்களில் பதிந்திருக்க மணப் பெண்ணான அவள் மெல்ல நடந்து வருகிறாள். பழக்கப்படாத தள்ளாட்டத்தோடு, ஆனாலும் தன்னம்பிக்கை மீளிர அடிமாறும் கால்கள். அவள் கைவிரல்கள் என்னோடு சேர்க்கப்படுகின்றன. ஒவ்வொரு விரலிலும் ஊடாடும் இனிமை பயம் தெளிவாகிறது.

நான் என் கைப் பற்றியவளைப் பார்க்கிறேன்.

அந்த முகத்தின் தெய்வீகம்! அதன் புனிதம் எனக்கா? இது ஏற்பா, பலியா? எனக்கா இவள்? இந்த மென்மையானவளின் புன்னகையும், பூரிப்பும் பனிவிடை





## பனிப் பாறை பூமி

இன்னும் ஐம்பதாயிரம் மிலியன் ஆண்டுகளுக்குப் பிறகு பூமி எப்படி இருக்கும்? பூமியில் உயிரினங்களே இருக்க மாட்டா. சந்திரன் பூமிக்கு இன்னும் மிக அருகில் வந்துவிடும். சூரியன் மிகத் தொலைவில் சென்று டென்னிஸ் பந்து அளவுள்ளது போல் காணப்படும். அதனால் அதன் ஒளி நமக்கு மிகக் குறைந்து போகும். பூமி முழுதும் பனிப் பாறையாக உறைந்து காட்சி யளிக்கும். இன்று பௌர்ணமி தினத்தில் பூமியில் காணப்படும் ஒளி அளவுதான் சூரியனிடமிருந்து நமக்குக் கிடைக்கும். மனிதன் பூமியில் இருக்க மாட்டான். அவன் வேறு கிரகங்களில் குடியேறி இருந்தால் தான் உண்டு. இங்கு அவன் உயிர் வாழ ஏற்ற சூழ்நிலை இராது. ஆனால் அன்றும் பூமி சூரியனை வலம் வந்தபடிதான் இருக்கும். -லைதீப்

## நான்காவது கை



குழந்தை 'குவா குவா' என்று அழுதால், தொட்டிலை மெதுவாக ஆட்டிவிடும் இயந்திரம் ஒன்று விற்பனைக்கு வரும் காலம் அதிக தொலைவில் இல்லை. ஜெர்மனியில் ஹாம்பர்க் நகரில் இரண்டாண்டுகளுக்கு ஒருமுறை "நீங்களும், உங்கள் உலகமும்" என்ற தலைப்பில் நடக்கும் கண்காட்சியில் இந்த ஆண்டு விண்வெளி ஆராய்ச்சிக்கும் எலெக்ட்ரானிக் துறைக்கும் முக்கிய இடம் கொடுக்கப்பட்டிருந்தது.

இக்கண்காட்சியில் இரு எலெக்ட்ரானிக் இயந்திரங்கள் அனைவரது கவனத்தையும் கவர்ந்தன. சீட்டு விளையாட்டின்போது 'ஒரு கை குறைகிறது' என்ற கவலை இல்லாமல் சீட்டு விளையாடுகிறது ஒரு கம்ப்யூட்டர். குழந்தை இலேசாக முனகினாலும் உடனடியாகத் தொட்டிலை ஆட்டி விடுகிறது ஓர் இயந்திரம். இவை பலரது பாராட்டுதலைப் பெற்றன. (பூ. பி. எஸ்.)

யும் எனக்காகவா? பிற பெண்களை அள்ளி அள்ளி விழுங்கிய என் விழிகளுக்கு இவளை ஏறிட்டு நோக்கும் உரிமை உண்டா? தன்னைக் காத்து எனக்குத் தர வந்திருக்கிறாள் அவள். உலகம் அவளை ஏற்கும் உரிமையை எனக்குத் தருகிறது. ஆனால் கூசாமல் அதை என்னால் ஏற்க முடியுமா?

எனக்காக இவள் பூவிட்டு, பொட்டிட்டுப் பொலிவுற்றுக் காத்திருக்கிறாள்! என் இதயம் புகவா இந்த முயற்சி? அவளின் தவத்துக்கும், ஆராதனைக்கும் உரியவனாநான்?

மணக் கோலத்தோடு தொழுதெழுந்த என்னை அப்பா தனியே அழைத்தார். "டேய், ராஜா! லலிதாவை மனம் நோகாமல் வைத்துக் கொள். அவள் கையில் நம் குடும்பம் சிறப்புறும். பழைய பாதையை விட்டு விலகி விடு. உனக்காக வந்தவளுக்கு இனியும் துரோகம் செய்யாதே....!"

இனியும் என்றால்? இது புரியவில்லையா? இது வரையில் இவளுக்கு அல்லவா துரோகம் செய்திருக்கிறேன். ஒரு பெண் மனைவியானபின்தான் கணவன் அவளுக்குக் கொடுமை செய்ய வேண்டும் என்பதில்லையே! வாலிபத்தின் வரையறைக்குட்படாத காரணத்தால் ஒருவன் தனக்கு வரப் போகும் எங்கோ அவனுக்காக அன்பு நோற்றவாறு காத்திருக்கும் ஒரு மஞ்சள் பூசிய முகத்துக் கல்லவா துரோகம் செய்கிறான்!

வானச் சரிவில் வெள்ளி நிலா முளைத்தது.

என் கால்களில் பட்டு விரல்கள் படுகின்றன. அதைத் தொட்டு ஏந்தும் பக்தியைக் கண்டு வியந்தேன் நான். மணந்த அன்றே நான் அவள் தெய்வமா? என்னைத் தெய்வமாகத் தொழவும் ஒருத்தியா? இப்படி வணங்க நான் ஏற்றவனா? தொழுவதற்கு ஏற்றவனாக அவள் என்னை நினைத்து விட்டதால், நான் அப்படி ஆகிவிட்டேன் என்று பொருளா?

அவளை அள்ளி எடுக்கக் கைகள் கூசுகின்றன. அந்த முகத்தோடு முகம் நோக்கிச் சிரிக்கவும் கூடவில்லை. என் கடந்த காலம் உணராதவளை எப்படி ஏமாற்றி நடிப்பது? அவள் பேரழகில் லயிக்கும் மனம் முதல் தடவை ஏற்கும் சிலிர்ப்பல்லவே இது? தொட முடிந்த எல்லையில் கிடந்த எல்லா ஆசைகளையும் சபலங்களையும் ஏற்று அநுபவித்து முன்பே வாழ்ந்து விட்டவனல்லவா நான்? ஏதோ ஒரு நிர்ப்பந்தத்துக்காக அவள் என்னுடன் பிணைக்கப்பட்டாள். அவளைத் தொட எனக்கு அருகதை ஏது?

அவளின் அன்புப் பார்வையிலும் உபசரிப்பிலும் நான் கட்டுண்டேன். திறந்த பலகணி வழியாக உட்புகும் சுகக் காற்றின் சிலுசிலுப்பில் மெல்லியதாகக் கரைந்திருந்த மல்லிகை மணம் சூழ்ந்தது.

காசுக்கு வாங்கிய போது கண்ட அதிகார சுகங்களில் காணாத நிதான வேகம், புலன்களுக்கெட்டாத இனிய சோபை....

ஆனால் என்னுள் இதென்ன பெருத்த மன மோதல்?

நீந்தத் தெரியாதவனுக்குப் பன்னீர் நிரம்பிய குளம் என்றாலும் பயம்தானே? அதைப் போலவா இது? இல்லை.... இது நாஸ்திகனுக்குத் தெய்வத் திருமுன் ஏற்படும் மயிர்ச் சிலிர்ப்பு போல்.... ஏதோ ஒரு தயக்கம்!

அப்பாவும் அம்மாவும் காசிக்கு யாத்திரை போனார்கள். திரும்ப இரண்டு மாத மாகும் என்னும் போதே என்னுள் இலே

சான அச்சம் முளைவிட்டது. லலிதாவிடம் எனக்கு அச்சமா? அந்த அன்புருவத்திடம் நான் கரைந்து போக முடியாதபடி தடுக்கும் என் குற்ற மனப்பான்மையை எண்ணித் தனிமையில் வெந்தேன்.

அந்த நாட்களில் அவளை எங்கேயும் அழைத்துக் கொண்டு போகவில்லை என்று அவள் மருகியிருக்கலாம். ஆனால் மற்றவர்களுடன் அதே நிலையில் பழகியிருந்த எனக்கு லலிதாவை அவ்விதம் அழைத்துச் செல்ல மனம் ஒப்பவில்லை.

அந்த இரண்டு மாதங்களும் அவள் குடும்ப நிர்வாகத்தில் எனக்குத் துளியும் சிரமம் ஏற்படாதவாறு பார்த்துக் கொண்டாள். ஆனால் எங்களுக்குள் மனம் திறந்த பேச்சோ, சரி சமமான சிரிப்போ சூழ்ந்திருக்கவில்லை. எனவே, அப்பாவும் அம்மாவும் எப்போது வருவார்கள் என்று காத்திருந்தேன் நான்.

அன்று நான் வீடு திரும்பிய போது லலிதா நிதானமாகச் செடிகளுக்கு நீர் வார்த்துக் கொண்டிருந்தாள். அவள் உழைப்பாலும், சுறுசுறுப்பாலும் கொல்லை பூத்துக் குலுங்கியது.

அன்று வரை என்னோடு பேசியறியாதவள் அன்றைக்கென்னவோ என்னைக் கண்டதும் தன் முகத்தை என் மீது புதைத்துக் கொண்டாள்.

அவளை இரு கைகளாலும் எடுத்து உற்று நோக்கிய போது இதென்ன கண்ணீர்?

"லலிதா! ஏன் அழறே?"

"உங்களுக்கு.... என் மீது...." அவள் திணறினாள்.

"உன் மீது அன்பே இல்லை என்று நிர்மானித்து விட்டாயா? அதற்கு யோக்கியதை இல்லையென்றாலும்கூட உன் மீது அன்பாகத்தான் இருக்கிறேன், லலிதா! உன்னைக் கண்ட தரிசனத்தில் நான் கருகி நீராகி விட்டேன். இனி மேல் நான் புடமிட்ட தங்கம் போல் ஆனால்.... ஆனால்... என் நினைவுகள்..... அவை என்னைக் கொல்லும் வரை மீள வழி? அதற்கு எனக்கு மன்னிப்பு உண்டா என் தெய்வத்திடம்?" நான் துயரில் துடித்தேன்.

பூ ஆரம் போல் அவள் கைகள் என் நெஞ்சில் வளைந்தன. கனிவு ததும்பும் திருமகளாக முகம் என்னை நோக்கின. நான் சற்று முன் தொழுது வந்த அம்பிகையின் அதே அருட்சுடர் விழிகள்! நெஞ்செல்லாம் புல்லரித்தது. இப்படிப்பட்டவன் என்று தெரிந்தும், என்னை ஆட்கொண்டு, என் துயர் துடைத்துக் குற்றம் மன்னிக்க வந்த தெய்வமா இவள்?

நான் கைகூப்பி விட்டேன்.

அவள் முகத்தின் முறுவலில் பதற்றம். என் கைகளைப் பிரித்துக் கண்களில் ஒற்றிக் கொண்டாள். "வாழ்க்கையில் திருந்திய உள்ளம் எல்லாவற்றையும்விட உயர்வானது! நீங்கள் என் கணவர்! என் தெய்வம்! என்னை ஆட்கொள்ளத்தான் வேண்டும், அடிமைப்படக் கூடாது!"



" லீலா! காதல் கண்ணோட்டத்துடன் நான் உன்னுடன் பழகிவருகிறேன் என்பதை இப்போதாவது நம்புவாயா?"

நான் சிலிர்ப்போடு நிமிர்ந்தேன். 'இவள் எனக்காகவே வந்தவள்! இதுதான் தெய்வீகப் பெண்மையின் இனிய பண்பு!'

அன்று நானும் லலிதாவும் காசியிலிருந்து திரும்பும் என் பெற்றோரை வரவேற்க ஸ்டேஷனுக்குச் சென்றோம். "பிரயாணம் எல்லாம் எப்படி அப்பா?" என்று கேட்டேன் நான்.

"நல்ல பிரயாணம்தான் ராஜா! காசியிலே, கங்கையிலே நல்லா முழுகி எழுந்தோம். ஒண்ணுதான் அங்கே எனக்குப் பிடிக்கவே இல்லை. சாக்கடைகள் கங்கையிலே வந்து கலக்கற அக்கிரமம் எனக்குத் தாளலே!" என்றார் அப்பா.

"க்கும்! அதனாலே என்னவாம்? கங்கை அமிர்தமாக்கும்! தன்கிட்டே எது வந்து கலந்தாலும் அதையும் அமிர்தமாக்கிவிடும்! எல்லாச் சாக்கடைகளும் கங்கையிலே சேர்ந்தாச்சானு அவையும் கங்கைதான்! உங்களுக்குத்தான் ஏத்துக்க முடியலே!" என்றாள் அம்மா.

அடே! அம்மாதான் எத்தனை அழகாகச் சொல்லி விட்டாள். என் மன இருட்டில் ஒளியைப் பாய்ச்சி விட்டாள்!

நான் லலிதாவைப் பார்க்கிறேன். அருட்சுடராக நிற்கும் அவள் கங்கை — அதில் வந்து சேர்ந்த கழிவுநீர் நான். ஆமாம், இந்தச் சங்கமத்தில் நான் கங்கையின் நீரோடு நீராக ஐக்கியமாகி விடுகிறேன்.

ஓங்கிய பெண்மையின் சிறப்பில் என் மங்கிய வாழ்வு ஒளி பெறுகிறது. அவள் புன்னகை என்னை ஆட்கொள்கிறது.

இனி நான் என்ற ஒருமை இல்லை! அவள் என்று பிரிக்கும் இருமையும் இல்லை. ஒன்றும் ஒன்றும் சேர்ந்தால் இரண்டாகும் என்ற கணக்கும் பொய். இரண்டும் சங்கமித்தால் ஒன்றே என்பதுதான் உண்மை.

# தீபாவளி விற்பனை

இவ் வருடத்திய பிரத்யேக கலர் பட்டுப் புடவைகள்
ஏராளமாக ஸ்டாக் செய்துள்ளோம்

கண்ணைக் கவரும் கலர்களில் காஞ்சிபுரம் பட்டுப் புடவைகள் (காஞ்சிபுரம் விலைக்கே) நவநாகரீகமான பனாரஸ், தர்மாவரம், ஆரணி பட்டுப் புடவைகள் மற்றும் பம்பாய் பேன்ஸி புதிய ரக சேலைகளும் ஏராளமாக வரவழைத்துள்ளோம்.

உங்கள் தேவைக்கு இன்றே விஜயம் செய்யுங்கள்

# குமரன் சில்க்ஸ்

**(சாரி சென்டர்)**

2, நாகேஸ்வர ராவ் ரோடு, (பனகல் பார்க் எதிரில்)
சென்னை -17 போன்: 443544

தயாரிப்பு நிலையங்கள்:

| குமரன் சில்க் ஹவுஸ் | குமரன் சில்க் சென்டர் |
|---|---|
| 29-B, மேட்டுத் தெரு, காஞ்சிபுரம்-1 | 28, தென்னமரத் தெரு, ஆரணி (N.A.Dt.) |

*தீபாவளி வரை எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு*

SARATH

# ஆல்போ-ஸாங்

**எல்லா வயதினருக்கும்
சிறந்த டானிக்**

உங்களுடைய உடல்வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இளையோர் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.






ஜே. அன் ஜே. டிஷேன்
ஹைதராபாத் (டெக்கான்)

## வம்பு - வதந்தி - புரளி

''அப்படியா? என்னால் நம்ப முடியவில்லையே!''

''நிச்சயம் இருக்காது.''

''அதுமட்டும் எப்படி நடக்கும்?''

''ஒருகாலும் இருக்க முடியாது.''

''யாரோ புரளி கிளப்பி இருப்பார்கள்.''

''வதந்திகளை நம்பாதீர்கள்!''

''ஏதாவது கதை கட்டி விடுவதே சிலருக்கு வேலை!''

''கார்ப்பரேஷன் குழாயிலாவது தண்ணீர் வரவாவது? யாருக்குக் காது குத்த நினைக்கிறார்கள்?''

-மீன்பாறை சுப்பிரமணியம்




இந்த மீன் தண்ணீரை நிறையக் குடித்திருப்பதால் தன் சாதாரண உருவத்தை விடச் சுமார் மூன்று மடங்கு பருத்திருக்கிறது. இதன் விளைவாக அதன் உடம்பில் உள்ள சிறுசிறு முட்கள் விரைப்பாக நிற்கின்றன. எதிரிகளை இதன் உருவமும் முட்களும் அச்சுறுத்தி விடுகின்றன. ''மச்சர்ஸ் வோர்ல்ட்'' - 'நாயக்'

## குறைவில் நிறைவு



''எல்லோரும் இவ்வளவு அழகிய ரோஜாவோடு முள்ளையும் சேர்த்துப் படைத்தானே என்று வருத்தப்படுகின்றனர். நானோ, இவ்வளவு முட்களோடாவது இந்த ரோஜாவைப் படைத்தானே என்று மகிழ்ச்சி அடைகிறேன்.''

ஆதாரம்: ஆல்பான்ஸ்கார்
ரசித்தவர் : வி. சம்பத்குமார்

## மூன்று பிரதமர்கள்

உலகத்திலேயே முதன் முதலாக ஒரு பெண்ணைப் பிரதம மந்திரியாக்கியது இலங்கைதான். அதன்பின் பாரதப் பிரதமராக திருமதி இந்திரா காந்தி பதவி ஏற்றார். அண்மையில் இஸ்ரேல் நாட்டில் 'கோல்டா மெய்ர்' என்ற பெண்மணி பிரதம மந்திரியாகி யிருக்கிறார். இலங்கை, இந்தியா, இஸ்ரேல் - மூன்று பெயர்களும் 'இ' என்ற எழுத்தில்தான் ஆரம்பமாகின்றன. மூன்றும் நான்கெழுத்துப் பெயர்கள்! என்ன ஒற்றுமை!

- சரோஜா ராமச்சந்திரன்

## அதிர்ஷ்டம் எங்கே ?



ழீன்காக்டு என்ற பிரெஞ்சு எழுத்தாளரிடம் ஒருவர், ''அதிர்ஷ்டம் என்பதில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?'' என்றார். அதற்கு எழுத்தாளர், ''ஏன் இல்லை? நிறைய உண்டு. நமக்குப் பிடிக்காதவர்கள் ஒரு காரியத்தில் வெற்றிபெற்று விட்டால் அதற்குக் காரணம் காட்ட அதிர்ஷ்டம்தானே பயன்படுகிறது?'' என்றார்! - சரோஜா ராமச்சந்திரன்

## பணக்காரர் பிடித்த வேலைக்காரர் !



பணக்காரர் ஒருவர் ஓர் ஆசாமி கொட்டாவிவிட்டுக் கொண்டு சும்மா நிற்பதைக் கண்டார். ''உனக்கு வேலை தருகிறேன். என் இடத்துக்கு வா'' என்றார்.

பணக்காரர் வீட்டுக்கு வந்து சேர்ந்தான் அந்த ஆள். காலையில் எழுந்ததும் நிறையப் பலகாரம் சாப்பிட்டான். ''நீ வேலை செய்ய வேண்டிய வயல் வெகு தூரத்திலிருப்பதால் பகல் உணவு வேளைக்கு நீ இங்கே திரும்ப வர முடியாது! மதிய உணவையும் இப்பொழுதே சாப்பிட்டு விடு. மாலையில் சீக்கிரம் வீடு வந்து சேர வேண்டாம்! நிதானமாக வேலையை யெல்லாம் முடித்துவிட்டு வா!'' என்றார்.

பலகாரம் சாப்பிட்டு விட்டதால் நிறையச் சாப்பாடு சாப்பிட மாட்டான் என்பது பணக்காரரின் எண்ணம்! அந்தப் புதிய வேலையாள் மதிய உணவைச் சிரமப்பட்டுச் சாப்பிட்டு முடித்தான்.

பணக்காரர், ''சரி! வயலுக்கு உடனே கிளம்பு!'' என்று துரிதப்படுத்தினார். வேலைக்காரனோ கொட்டாவி விட்டபடியே துண்டை உதறிப் படுத்து விட்டான். உண்ட களைப்பு அவனுக்கு. நாடோடிக் கதை

## திமிங்கிலம்

ஒரு நாளைக்கு ஏழு பவுண்டு வீதம் வளரும் குட்டித் திமிங்கிலம். இப்படி 45 வயது வரை வளரும். ஒரு நாளைக்கு இரண்டு டன் உணவு சாப்பிடும். திமிங்கிலம் ஏன் கப்பல்களைத் தாக்குகிறது? ''ஆண் திமிங்கிலம் தன்னுடைய காதலியைக் கவர்ந்து செல்ல வரும் இன்னுமொரு பெரிய கடல் பிராணி என்று கப்பலை நினைத்து விடுவதால் தாக்குகிறது'' என்று அபிப்பிராயப்படுகிறார் ஓர் ஆராய்ச்சியாளர். திமிங்கிலத்துக்குக் கேட்கும் சக்தியைத் தவிர, பார்க்கும், முகரும் சக்திகள் ரொம்பவும் குறைவு.

- டைம் - ரமேஷ்

# 'மாடர்ன் லவ்'

இதோ, இவள்தான்! இவளேதான் ஸார்! நிற்க மாட்டீர்களா? நின்று பாருங்கள்! இவள்தான் மிஸ் அன்னபூரணி!... பெயர் பழைய பெயர்தான்! ஆள் மட்டும் புதிதா என்ன? ஆளும் பழைய ஆள்தான்! இருபத்தி ஐந்து வருஷப் பழைய ஆள்! வயசு இவ்வளவு ஆகிறது. இன்னும் மிஸ் அன்னபூரணி! இவள் ஏன் அவ்வளவு வேகமாகப் போகிறாள்? இதுதானே கேள்வி? அவள் வேகத்துக்குக் காரணம் கிடையாது. பைக்ராப்ட்ஸ் ரோட்டில், பெல்ஸ் ரோட் 'சந்திப்பு'. அதுவரை தான் வேகம். அப்புறம் மெல்லத்தான் நடப்பாள். பஸ் ஸ்டாப்பில், கறுப்புப் பாண்ட் கலர் ஸ்லாக் நின்றால் ரொம்ப ஸ்லோ... படு ஸ்லோ!...டெட் ஸ்லோ!...

மிஸ். அன்னபூரணி! செல்லமாக அழைப்பதென்றால் மிஸ் ஆன். ...மிஸ் ஆன்! இவள் சிவப்பு, என்ன சிவப்பு தெரியுமா? சிவப்புமில்லை, வெளுப்புமில்லை. அசட்டு நிறம்! ரொம்ப ஸ்லிம்! உடம்பு ஒல்லி! கலர்ப் பல்லி! என்றைக்கும் தலை குனிந்தது கிடையாது. பிடரி வளைந்தது நினைவில் இல்லை. குச்சிக் கைகள், பூசிய சதை கிடையாது. கையில் வளை கிடையாது. காதில் வளையம் உண்டு. அந்த வளையம் நாளுக்கு ஒன்றாய் மாறும். சிவப்பு, பச்சை, வெள்ளை கலர்க் காதணிகள்... விலை பத்துப் பைசா! புடவை நிறத்துக்கு அது பொருந்துமா? ஆகா விட்டால் ராத்திரி தூக்கம் இல்லை. தலைமயிர் சுருளல்கள். சுருட்டிவிட எத்தனை நேரம் ஆயிற்றோ?... ஒரு நாள் பளபளபள பப்பள பள... இன்னொரு நாள் குருவிக் கூடு!... அது ஒரு நாகரிகம்! முன் தலையில் கத்தரித்து விட்டிருக்கிறது. அது தாண்டினால் கன்றுக் குடுமி! சில சமயம் 'பாப்' கூட உண்டு. முகம் நீட்டுப் போக்கு. பாதாம் பருப்பு. கன்னம் சற்று ஒட்டல். செதுக்கி எடுத்திருக்கிறது. புருவம் இரண்டும் நல்ல வளைவு. ஒரு நாளைக்கு ஒரு தினுசு. பளபளப்பில்லாத கறுப்பு.... மூக்கு, நீள மூக்கு. நிஜமான மூக்கு. நல்ல கூர்மை. அப்பா சாயலோ, அம்மா சாயலோ? யாருக்குத் தெரியும்? மூக்குத்தி போட்டது கிடையாது. மூக்குத்தி போட்டால் கிழவி! ...குறத்தி! ...வயசு அதிகமாகக் காண்பித்து விடும்.

கண்கள் சின்னது. மைதான் முகத்தை அடைக்கிறது. மைச் செலவு மாதம் மூன்று ரூபாய்! முப்பது ரூபாய் செலவழிக்கவும் தயார். மை இல்லை என்றால் 'உயிர்' இல்லை. உற்றுப் பார்த்தால் கண் ஒன்று சற்றுக் கோணல். அது வெளியே தெரியாது. மை வாழ்க! நெற்றியில் ஒற்றைக் கோடு ஒரு நாள், ஒரு நாள் சோடா பாட்டில் அளவு வட்டம். அது ஒவ்வொரு 'மூட்'. உதடுகள் ஒரே வறட்சி! கிட்டப் போனால் கண்டு பிடிக்கலாம். பற்கள் நிஜம்தான்! மஞ்சள் நிறம். முத்துப் பல் இல்லை. தத்துப் பல் ஒன்று உண்டு. கடலைப் பருப்பு... காப்பிக்கொட்டை வகை. சிரிப்பு காதுவரை. அர்த்தமில்லாத சிரிப்பு. காரணமில்லாத சிரிப்பு. பைத்தியக் காரச் சிரிப்பு....

அவளிடம் நைலக்ஸ் ஸாரி மொத்தம் பதினேழு இருக்கும். கண்ணாடி பீரோவில் நாலு நாலாய் அடுக்கி வைத்துத் தோழிகளுக்குக் காட்ட வேண்டும். இது வாழ்க்கை லட்சியம். அப்பொழுதுதான் நெஞ்சு வேகும்.

மிஸ் ஆன் ரொம்ப மாடர்ன்! வேகமாகப் போகிறாளே எங்கே? இதுதானே கேள்வி? ஆபீஸ் போகிறாள். கம்பெனி வேலை. வேலை அவளை சம்பாதித்தது. ஆமாம்...பேச்சைக் கண்டு மயங்கி, அவள் பேசுகிற ஆங்கிலத்தில் மயங்கி...அந்த மானேஜர் வேலை கொடுத்தார். போகிற வழியில் காரில் வந்தால் 'லிப்ட்'. ஒரே சிரிப்பு... ஒரே வெட்கம்! கண் இருப்பதே தெரியாது. அப்படி ஒரு சிரிப்பு...

''ஹல்... லோ!...''

கீச்... மூச்... கீச்மூச்... ஹாய்... இங்கிலீஷ் தப்பு, தவறு. அது யாரும் கேட்கக் கூடாது. அர்த்தமில்லாத அவச் சத்தம்.... குரங்குக் கும்மாளம், பூனைச் சண்டை — அவளுக்கும் புரியாது, அவனுக்கும் புரியாது!

மிஸ் ஆனுக்கு நிறைய 'பிரண்ட்ஸ்'. எல்லாம் பாய் ப்ரண்ட்ஸ்! நான்கு பேர் கூடி நின்றால் அவள் புன்சிரிப்பு மாறவே மாறாது. அது ஸ்வர்க்கம். இரண்டு பேர் இரண்டு பக்கம் நின்று பேசினால் ஒரு ஸ்டைல்... ஒரே சிரிப்பு. இமர் வெட்கம்! மூன்று வயதுக் குழந்தை மாதிரி ஆச்சரியம்! உலகமே பொறாமைப்பட வேண்டும். அப்படி ஓர் ஆர்வம். பேச்சு, அர்த்தமில்லாத கீச்... மூச்... தப்புத் தவறு யாரும் சொல்ல முடியாது. இங்கிலீஷ் தூக்குப் போட்டுக் கொண்டு தொங்க வேண்டும்...

பாய் பிரண்ட்ஸ்... மிஸ்டர் ரவி... மிஸ்டர் புல்லையா... மிஸ்டர் நம்பியார்...சிட்டிபாபு. மிஸ்டர் ரவிதான் இப்பொழுது நெருக்கம். டியரஸ்ட்... ஃபேவரிட்!... முன்னால் புல்லையாதான் டியரஸ்ட்... புல்லையா மெடிகல் ஸ்டூடண்ட், ரொம்பப் பணக்காரர்! ஆனுக்கு 'லவ்'. அந்த 'லவ்' தோற்றது..... அடுத்தது ரவி.

ரவி, கறுப்புப் பாண்ட், கலர் ஸ்லாக்... ஸ்கூட்டர் வேகம்... அசுர வேகம்... க்ரீச்...

''மை காட்!... கீச்மூச்...''

''மிஸ் ஆன்... ஈவினிங் பிக்சர் போகலாமா?''

''ஓ எஸ் ரெடி.... ப்ளீஸ் கம்... தாங்க்யூ! சீரியோ! பாய் பாய்... டாடா...''

* * *

ரவி, ஸ்கூட்டரில் ஒரு கால், தரையில் ஒரு கால். மிஸ் ஆன், படி ஏறுகிற அழகில் லயிப்பு... ஆனுக்கு ஒரே பெருமை. குழந்தை துள்ளுகிற மாதிரி ஒரே ஸ்டைல்! வாசலில்

# பூரம்

நிற்கிறாள் தாயார். குச்சிக் கையைத் தூக்கி ''டாடா..: சீரியோ... பாய்... ப்பாய்...!''

* * *

மஞ்சள் பற்கள், சுரைக்காய் உடம்பு, உலர் உதடு, தலைப் பரட்டை!... வெறும் உடம்பில் வர்ணம் பூசிக் கொண்டார்களோ? டைட் கவுன்! ஸ்கின் கலர் கவுன்! பவுடர் ஸ்நானம்...

மிஸ் ஆனுக்கு ஆங்கிலோ இந்தியன் நண்பர்கள் ரொம்ப அதிகம்.... மிஸ்டர் மர்ரே, மிஸ்டர் ஹூகஸ்... மிஸ்டர் மர்ரே அட்டைக் கரி! மிஸ் 'ஆன்' கம்பெனியில் இருந்து படி இறங்குவதற்கும் மிஸ்டர் மர்ரே ஸ்கூட்டரில் வருவதற்கும் க்ரீச்... ப்ரேக்!...

''ஹவ் டூடு ஆன்?''

''ஓகே! ஹவ் அபவுட் யூ?''

''ஓகே! டுமாரோ, வில் யூ கம் ஃபார் தி டான்ஸ்?''

''ஷ்யூர் ஷ்யூர்... ஓகே...''

* * *

ரவி, ஸ்கூட்டர், பஸ் ஸ்டாப்... மூன்றும் எதிரில் நிற்கின்றன.

மிஸ்டர் ரவி, லாட்ஜ் வாழ்க்கை, பத்து வருஷங்களாயிற்று...... ரொம்ப ஜாலி....

ஹிஹி... கிச் மூச்... ஹாய்! ஹோ... ஹிஹி... ஒரே இனிப்பு. புடவை நழுவுகிற அலங்கோலம்! உலகமே வந்து கேட்க முடியாது. சமூகம் கேட்க முடியாது.... யாருக்கும் தைரியம் கிடையாது.

தியேட்டர்! படம் பார்க்க வந்தவர் பாதிப் பேர்... விளக்கு அணையக் காத்திருப்பவர் பாதிப் பேர்.... விளக்கு அணைந்த பிறகு உள்ளே நழுவும் ஜோடி... தறிகெட்டு ஓடுகிற நினைப்புகள்..

ஆன் — ரவி. தியேட்டரில் தனி 'பாக்ஸ்!'

''என்ன படம்?''

''யாருக்குத் தெரியும்?''

சிரிப்பு.

கும்மிருட்டு. அதுதான் அவர்கள் சொர்க்கம். இருளில் மூழ்குகிற சொர்க்கம். எது சொர்க்கம்? எது நரகம்?

ஸ்கூட்டர் நடு இரவில் வீட்டு வாசலில் இறக்கி விட்டுப் போகிறது.

''டாடா... சீரியோ... கிச்மூச்... பாய்... பாய்...'' — அழுகை.

* * *

ரவியின் லாட்ஜ்... இருட்டு லாட்ஜ்.... மௌனமான தெருவில் லாட்ஜ். உள்ளே சத்தம் போட ஆரம்பித்தால் கேள்வி கேட்பார் கிடையாது. மாடர்ன் லிவிங். கம்பெனிச் சம்பளம் எல்லாம் போக மாதம்



நூறு ரூபாய் கடன்; சில நாள் பட்டினி. மிஸ் ஆன் தருவாள். மிஸ் கிளாரா, கேட்டால் தருவாள். மிஸ் ஷீலா தருவாள். ஒளியில்லாத தோற்றத்துக்கு இந்த முகராசி. இன்று பட்டினி. சினிமாப் போனால் பட்டினி. திமர்க் கத்தல். பக்கத்து அறையில் சீட்டாட்டம். திமர்க் கத்தல். திமர் அமர்க்களம். திமர் மௌனம்.

மேஜையின் மேல் பத்திரிகைகள். எல்லாவற்றிலும் கலர் படங்கள். எல்லாம் ஒரே மாதிரி பத்திரிகைகள். பத்திரிகைகள் வாங்குவது படம் பார்ப்பதற்கு. படிக்கிற பழக்கமே கிடையாது.

ரவிக்குத் தூக்கம் இல்லை. சீட்டி அடிப்பது. சிகரெட் புகை வளையங்கள் விடுவது. டிரான்ஸிஸ்டரை மடியில் வைத்துக் கொண்டு தாளம் போடுவது. இது பொழுதுபோக்கு.

''டொக்... டொக்.... டொக்...''

கதவைத் திறந்தால் இருட்டில் மிஸ் 'ஆன்!'

''ரவி, ஸோ ஸாரி ரவி !''

''வாட் இஸ் திஸ் ?''

''ரொம்ப அர்ஜண்ட்... அம்மாவுக்கு ரொம்பவும் ஸீரியஸாயிடுச்சு.... நினைவே இல்லை....''

''அதுக்கென்ன ?''

''அவளுக்கு உடம்பு வர வர 'வீக்' ஆயிடுச்சு....''

''சரி, இப்ப என்ன?''

''அவள் செத்துப் போயிடுவாள்...''

''சரி....''

''என்ன சரி? நான் அனாதை ஆயிடுவேன். அப்பா இல்லையே. அம்மாவும் போயிட்டா?''

''டாக்டரைக் கூட்டியாரட்டுமா?''

''இனிமே பிரயோஜனமில்லே....''

''சரி, பிரயோசனமில்லே....!''

'ரவி, நீ மனசு வைக்கணும்.''

''ஐ லவ் யூ....!''

''வில் யூ மாரி மீ ?''

''கல்யாணமா ? எதுக்கு?''

''எனக்கு ஹஸ்பெண்ட் வேணும். நான் அனாதையா இருக்கப் பிரியப்படலே !''

'' தேடித் தரேன்.''

''நீங்க மாட்டீங்களா ?''

''நான் இன்னொரு பெண்ணுக்குப் 'பிராமிஸ்' பண்ணிட்டேன்.''

''ப்ராமிஸ் எனக்குக்கூடத்தான் பண்ணினீங்க....''

''எப்ப ?''

''கொஞ்ச நாள் முன்னாலே....''

''இதைவிடப் பெரிய ப்ராமிஸ்.... அதை என்னால் மீற முடியாது.''

ஒரு விசும்பல், ஒரு விம்மல், மூக்கு உறிஞ்சல்.

''எனக்கு வேறே ஹஸ்பெண்ட் கிடையாது......!''

''அசடு ! ஏன் அப்படி ?''

'' நான் உங்களை ரொம்பவும் ' லவ் ' பண்ணறேனே ?''

''அதனாலே என்ன? நான் பிரதரா யிருக்கேனே...!''

''நோ... நோ...''

''அம்மா ஸீரியஸ், டாக்டரைக் கூட்டியார வேணும் ?''

''அவள் பிழைக்க மாட்டாள்!''

''அதுக்காக? என் பிரண்ட் டாக்டர் இருக்கான்....!''

''என்ன வயசு ?''

''அவனுக்கு முப்பத்தஞ்சு.''

''பரவாயில்லே. கலியாணம் ஆயிருக்கா?''

''இல்லே.''

''அவரை அழைச்சிக்கிட்டுப் போகலாமா?''

''உம், போலாம்.''

''அவரு கல்யாணம் கட்டிக்குவாரா ?''

''யாரை ? உன்னையா ?''

''உம்.''

''கேட்டுப் பாரேன் !''

''சரி, எங்கே இருக்கார்? ஸ்கூட்டரில் போகலாமா ?''

''பக்கத்து அறையிலே சீட்டாடிக்கிட்டு இருக்கார். கூப்பிடறேன். ஸ்கூட்டர் தரேன். வீட்டுக்கு நீயே அழைச்சிக்கிட்டுப் போ.''

''அவரு ஸ்கூட்டர் ஓட்டுவாரா ?''

''ஓ !''

டாக்டர் ! வாய், கண் காது மூக்கு எல்லாம் புகை வழிய நறுக்கு மீசையோடு அரை வெளிச்சத்தில் வந்து நிற்கிறது ஓர் உருவம்... கிளம்பி விட்டது ஸ்கூட்டர் ! அநுமதி கேட்கக்கூட இல்லை - மிஸ் ஆன் 'நறுக்'கென்று பின்னால் ஏறித் தோளைக் கட்டிக் கொண்டாயிற்று. முதுகில் சாய்ந்தாயிற்று. டாக்டர் ! சீட்டாடுகிற மயக்கம். முன்பின் தெரியாது. யாரோ ஒருவன் ! ஆனின் கை இடுப்பைச் சுற்றியிருக்கிறது.

வீட்டு வாசல். மிஸ் ஆனின் பிரமிப்பு! வீட்டு முன் வராந்தா வெளிச்சம் பரவுகிறது.

திடீரென்று ஆனின் விசும்பல் ! டாக்டரின் திகைப்பு ! ''வாட்? வாட் ?.... என்ன ''

''டாக்டர், எனக்கு விஷம் கொடுங்க டாக்டர் !''

''எதுக்கு?''

''அம்மா 'செத்துட்'டாங்கன்னு நான் அனாதை ஆயிடுவேன்.''

'' ஐ ஸீ !''

''ஸார், என்னையும் கொன்னுடுங்க ஸார் ! விஷங் கொடுங்க....''

''நோ, நோ.... உங்களுக்கு 'கலியாணம்' ஆகல்லே ?''

''அதனாலேதான் ஸார் !''

''நீங்க இப்ப ஏன் 'கலியாணம்' பண்ணக் கூடாது ?''

''இப்பவா ஸார் ?''

''எஸ்....!''

''நீங்க என்னை 'லைக்' பண்றீங்களா ?''

''நானு ? ஷ்யூர்....!''

''தாங்ஸ் ஸார் !''

''எதுக்கு ? ஏன் ?''

''நீங்க என்னை 'லவ்' பண்றதுக்கு.''

''லவ்வா ?!''

''ஸோ...நீங்க என்னைக் கல்யாணம் செஞ்சுக்கிறீங்க, இல்லே ? தாங்க்யூ ! ஐ லவ் யூ மச். வாங்க, மதர்கிட்டே ப்ளெஸ்ஸிங் வாங்கிக்கலாம்.''

''நோ நோ. பேஷண்ட் டையிங். வாட் சஸ் இஸ் ?''

''ஐயோ மூச்சு நின்னுருச்சு ஸார் !''

''எஸ்.... உயிர் போயிருச்சே ! ஸாரி !''

காலம் : மாலை 6 மணி

இடம் : லேடீஸ் கிளப்

"இப்பொழுது நான் எதைப்பற்றி பேசப் போகிறேனென்றால்........ எதைப்பற்றி பேசப் போகிறேனென்றால்......................................

"என்ன ரமா! இது? சொன்னதையே திருப்பித் திருப்பி சொல்லிண்டிருக்கயே. உன் மனசு எங்கேயோ இருக்கே?"

"இல்லை கல்யாணி! முதல் வரிசையிலே பாமாவைப் பார். அவளுடைய புடவையை பார்த்ததிலிருந்து எனக்கு மேலே பேச வரவில்லை. அவளுக்கு மாத்திரம் எந்தத் துறியிலிருந்து கிடைக்கிறது? அவள் புடவைக்குத் தனி பளபளப்பு."

"நான் காலையிலேயே கேட்டாச்சு. சாஸ்திரி கடையிலேதான் வாங்கினளாம். 67 வருஷ கடைன்னு. வேற என்ன சொல்றத்துக்கு இருக்கு."

"அப்படியா. நாளைக்கே சாஸ்திரி கடைக்குப் போய் ஸெலக்ஷனுக்கு முந்திக்கணும். அது சரி, சீ! நாம் என்ன ஸெல்பிஷ் ஆ இருக்கமே. கல்கத்தா, டெல்லி, ஜெம்ஷெட்பூரிலுள்ள நம் சிநேகிதிகள் கதி என்ன?"

"இதுக்கு என்னடி கஷ்டம்? நீ சொன்ன ஊரிலெல்லாம் சாஸ்திரி கடை சரக்கு கிடைக்கிறதாமே. அவாளையே நேர்லே பார்த்து வாங்கிக் கொள்ளச் சொல்லி எழுதிடு."

"கரெக்ட். தாங்க்ஸ்."

Madras : SAMPURNA SASTRIAR & SONS,
28, North Mada Street, Mylapore, Madras - 4
(Phone : 71719)

Calcutta : SAMPURNA SASTRIAR, 14-A, Park Side Rd.
Calcutta - 26 (Phone : 46 - 3976)

New - Delhi : MADRAS STORES, 96, Baird Road,
New - Delhi - I (Phone : 43632)

Jamshedpur : D. V. V. SASTRY'S HOUSE, 'M' Road,
Jamshedpur - I

"நம்ம கலியாணம் பத்தி அவகிட்டே சொல்ல முடியல்லியே ஸார் ... சொல்லி யிருந்தா நிம்மதியாச் செத்திருப்பாளே!"

"கல்யாணமா ? நான் இப்ப போயிட்டு நாளை காலையிலே வரேன்...."

"என்னை விட்டுப்பிட்டுப் போறீங்களா ?"

"எஸ்....!"

"நாளைக்கு வரீங்களா?"

"அப்புறம் வர்றேன்."

"தாங்க் யூ ! உங்க நேம் ?"

"என் பெயர்?.... லால் !"

"ஓ ! ஹனி ! ஹனி ! லால்.... டாடா! பாய் ! பாய் !"

ஸ்கூட்டர் இருளில் மறைகிறவரையில் ஆனின் பார்வை.

*   *   *

ஒரு வாரம் ரவியைத் தேடு தேடு என்று தேடியாகி விட்டது. களைத்துப் போய்விட்டான். 'டாக்டர்' ....அவர் டாக்டர்தானு? இல்லை ரவிக்காக டாக்டர் போல் வேஷம் போட்டாரா?... அவர் கண்ணில் படவில்லை. புல்லையா முகம் கொடுத்துப் பேசவில்லை. சிட்டிபாபு ஜெயிலுக்குப் போய் விட்டான் என்று தெரிந்தது. நம்பியாருக்குக் கல்யாணம் ஆகிவிட்டது. ஆன் டாக்ஸியில்தான் சுற்றிச் சுற்றிப் பார்த்தாள். எல்லா பஸ்களிலும் ஏறி எல்லாரையும் தேடியாகி விட்டது. ரவியின் அறைக்கு அடுத்த அறையில் ஓர் அரைப் பொட்டைக் கிழவன்தான் எட்டிப் பார்த்தான்...

"அவுரு காலி பண்ணிட்டுப் போயிட்டாரு போலிருக்குதே !...." என்று பல்லை இளித்தான்.

மிஸ் ஆனுக்கு ஒரு வாரம் ஒரே அலைச்சல்! ஒரே அவசரம்! ரவி கண்ணில் படவே இல்லை. வெறும் சுற்றல்.... யாரும் திரும்பிப் பார்க்காமல் போனார்கள். பார்க்கிற நபரை யெல்லாம் கேள்வி.

"நீங்க என்னை 'லைக்' பண்றீங்களா ?"

"..............?"

"..............?"

"ஸார் ! நீங்க என்னை 'லைக்' பண்றீங்களா ?"

"என்னது ?"

"என்னை 'லவ்' பண்ண முடியுமா?"

"வாட் ?"

"உங்களுக்குச் 'சந்தேகம்' வருதா ? ஏன் 'சந்தேக'ப்படறீங்க?.... நில்லுங்க ப்ளீஸ்!"

"........."

மிஸ் ஆன் மூலையில் நிற்பாள்... நகத்தைக் கடிப்பாள். யார் போனாலும் பின்னால் போவாள்.

"லுக் அட் மீ ப்ளீஸ் !"

நான்கு பேர் கூட்டமாக நின்றால் கூட்டத்தில் இடித்துப் புகுந்து சென்று நிற்பாள்.

"ப்ளீஸ்... ஆர் யூ மிஸ்டர் ரவி ?.... ஐ லுக் ஹைஸ் இஸ் இட் ?"

விதம் விதமாகச் சிரிப்பாள். கேள்வி கேட்பாள், நிற்பாள், ஓடுவாள், கேள்வி கேட்பார் கிடையாது ! ★



## வட்டமும் முக்கோணமும் வந்த விதம் !

எகிப்தில் வருடந்தோறும் விளைநிலங்களின் விஸ்தீரணத்தை வரையறுத்து எல்லை வகுத்தாக வேண்டியிருந்தது. ஏனெனில், நைல் நதியில் வெள்ளம் பெருக்கு ஏற்பட்டு விட்டால், அதன் காரணமாக விளைநிலங்கள் பாதிக்கப்பட்டு அவற்றின் வரையறைகள் தெரியாமல் மண் மூடி மறைந்து விடும். அப்போதெல்லாம் விளைநிலங்களின் உண்மை வடிவம், அவற்றின் பரப்பு இவைகளை முறைப்படி கணக்கிட்டுப் பாரபட்சமின்றி வரையறைகள் நிர்ணயிக்க யூக்ளிட்டின் ஜியோமிதி முறை பெரிதும் பயன்பட்டு வந்துள்ளது.

'ஜியோமிதி' (Geometry) யின் தந்தை என்று அழைக்கப்படும் யூக்ளிட் ஒரு கிரேக்க கணித மேதை.

முதலாம் தாலமி அலெக்ஸாண்டிரியாவில் அரிய மியூஸியம் ஒன்றை ஏற்படுத்தியதுடன், ஒரு புத்தகசாலையையும் உருவாக்கினர். அறிவு வளர்ச்சிக்குப் பலவிதங்களிலும் பயன்படும் நூல்களை அந்த நூல் நிலையத்தில் சேர்த்திருந்தார். பிறகு அந்த நூல் நிலையமே புகழ் பெற்ற பல்கலைக்கழகமாகவும் மாறிச் சிறந்த ஆராய்ச்சியாளர்களைத் தயாரித்தது. இந்தப் பல்கலைக் கழக மாணவர்தான் யூக்ளிட் -- அவரது ஜியோமிதி சம்பந்தமான கணித ஆராய்ச்சி நூல் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்றைக்கும் கணித நிபுணர்களைக் கவர்ந்துள்ளது. அவர் தாலமி மன்னனின் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து கணிதத்தில் புலமை பெறும்போது முப்பது வயதைக் கடந்து விட்டார். அவர் பெயரும் அவரது நூலின் பெயரும் 'யூக்ளிட்ஸ்' என்றே அமைந்து விட்டது.

பாபிலோனில் தான் ஜியோமிதி சம்பந்தமான வடிவங்களில் நிலப் பகுதிகள் ஆரம்பத்தில் கணக்கிடப்பட்டன. ஜியோ என்ற கிரேக்க வார்த்தைக்கு நிலம் என்பது பொருள். 'மெட்ரன்' என்பதற்கு 'அளவுகள்' என்பது அர்த்தம். நிலத்தின் மேற்பரப்பை அளந்து கணக்கிட உதவும் முறை என்பதே 'ஜியோமெட்ரி' என்று வழங்கலாயிற்று.

சாதாரண நிலங்களை வரையறுப்பதிலிருந்து ராஜ்யங்களின் எல்லையை வரையறுப்பது வரை ஜியோமிதி பயன்படலாயிற்று. ஜியோமிதி சம்பந்தமான உண்மைகளைத் 'தேற்றங்களாகத்' தொகுத்து (Theorems) அவற்றை ஆராய்ந்து, அவசியமான மாறுபாடுகளைப் புகுத்தி, உதவியிருக்கிறார் கணித மேதை யூக்ளிட்ஸ்.

இந்த நுணுக்கங்களை ஆராய்ந்த மேதைக்கு அக்காலத்தில் போதிய உபகரணங்கள்கூட இல்லை. எழுதுவதற்குக் காகிதம்கூட அவருக்குக் கிடைத்ததில்லை ! காய்ந்த இலைகளில் ஜியோமிதி வடிவங்களை நுணுக்கமாக வரைந்து பாதுகாத்து வந்தார் யூக்ளிட்ஸ் ! நீண்ட சதுர மரப் பெட்டிகளில் நன்றாகச் சலித்த மணலை நிரப்பி, கூர்மையான குச்சியின் உதவியால் ஜியோமிதி வடிவங்களை அமைத்துக் கணக்கிடுவார் யூக்ளிட்ஸ். தேவையற்றதை அழித்து, மீண்டும் வரைய இந்த முறை அவருக்கு ஏற்றதாயிருந்தது.

தாலமி மன்னன் சிறந்த கணித மேதை. அவன் யூக்ளிட்டின் சித்தாந்தங்களைப் பாராட்டி அவரிடமே தன் சந்தேகங்களைக் கேட்டறிந்து மாணவன் போல் பழகி வந்தான். - லயோலா



# சிரிப்பா... அது சீற்றமா?

**ஸ்ரீஹரி**

டவுனில் திருவிழாக் கூட்டம். எள்ளுப் போட்டால் எண்ணெயாய் ஒழுகும். அப்படிப்பட்ட கூட்டம்.

''எதற்காக ?''

உலகம் தெரியாதவர்கள் கேட்கும் கேள்வி இது. அண்ணல் காந்தியடிகள் பிறந்து ஒரு நூற்றாண்டு ஆகிறது. அதற்கு ஒரு விழா எடுக்க வேண்டாமா? எனவேதான் அந்தக் கூட்டம். அவர் வாழ்ந்த அறநெறியை உலகத்துக்கு மீண்டும் நினைவுபடுத்துவதற்காக, எளிய வாழ்க்கை வாழ்ந்து அஹிம்சையையும் சத்தியத்தையும் கடைப் பிடித்து உலகத்துக்கு ஓர் எடுத்துக் காட்டாக விளங்கியதற்காக நடக்கும் விழா!

அப்பப்பா ! காந்தியடிகளின் எளிமை எத்தனை கிராக்கியானது ! அவர் வாழ்ந்த பொழுது ஆன செலவைக் காட்டிலும், அவர் வாழ்ந்தது போன்ற நிகழ்ச்சியைப் படம் பிடித்துக் காட்டுவதற்கு ஆகும் செலவு கொஞ்சமா, நஞ்சமா ?

செலவு அதிகமானாலும், அவர் வாழ்க்கை முறையைக் கடைப்பிடிக்க ஓரிருவராவது முன்வந்தால்...?

இப்படி எண்ணத் தோன்றும் வேளையிலே காந்தியடிகளின் விழா ஒரு வியாபாரமாக அல்லவா ஆகிவிட்டது போலத் தோன்றுகிறது !

இவ்விழாவின் மூலம் காற்றுள்ள போதே தூற்றிக் கொள்ளத் தெரிந்த சில சமர்த்தர்கள் எப்படியெல்லாம் பணம் பண்ணுகிறார்கள்? கழைக்கூத்தாடி ஒருவன் ஒரு புறம் கும்பலின் நெருக்கடியை அதிகரிக்க வைக்கிறான். அரசியல்வாதியொருவர் ஒரு கூட்டத்தினரிடையில் காரசாரமாகப் பேய்க் காற்றில் அகப்பட்ட தனி மரத்தின் கிளைகளைப் போல் கைகளை வீசி வீசிப் பேசுகிறார். கும்பலில் நெருக்கடி அதிகமாகிறது. பொய்க் கால் குதிரை ஆட்டம் ஒன்று. இப்படிப் பற்பல நிகழ்ச்சிகள்.

இவற்றினிடையே ஒரு கும்பலிலிருந்து, ''டாய்! புடி! புடி! உடாதே! தொரத்து: செயினை களட்டிக்கிட்டு ஓடறான், உடாதே!'' என்று கூவியபடி ஒருவன் பாய்கிறான்.

யார் செயின்? யார் கழற்றினான்? ஒன்றும் தெரியவில்லை. ஆனால் அதற்குள் ''ஐயோ! என் குழந்தை கழுத்திலிருந்த செயின்....'' என்று ஓர் அன்னையின் கூக்குரல். தொடர்ந்து 'டாய்...டாய்...' என்று பலர் கூவியபடி கண்ட திசைகளில் பாய்கிறார்கள். சற்று நேரத்தில் நிம்மதி. கூச்சல்கள் குறைந்து நின்றன. ஓடினவர்கள் யாரையும் பிடிக்கவுமில்லை; திரும்பி வரவுமில்லை.

திருவிழாவில் அலங்கார வைபவங்களுடன் வீதி வலம் வந்து கொண்டிருந்தனர் சுவாமியும் அம்மனும். சுவாமியைப் பார்த்து அம்மை கேட்டாள்:

''சுவாமி! இது என்ன அநியாயம்! குழந்தையின் கழுத்திலிருந்த சங்கிலியைக் கழற்றிக்கொண்டவனே, 'திருடன், திருடன்! ஓடுகிறான், பிடியுங்கள்' என்று அருகிலிருந்தவர்களுக்குப் போக்குக் காட்டிவிட்டுக் கூட்டத்தில் கலந்து மறைந்து விடுகிறானே! இதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கிறீர்களே!''

கண்களை மட்டும் தேவியின் பக்கம் ஓட்டிய சுவாமி, தலையைச் சிறிது சாய்த்து ஒரு சிறு முறுவல் மட்டும் செய்தார்.

தேவி திகைத்தாள். சுவாமியின் போக்கும் குறிப்பும் புரியவில்லை. அப்போது—

கொடிகளை உயர்த்திப் பிடித்தபடி ஒரு தொண்டர் கூட்டம் கோஷமிட்டுக்கொண்டே முன்னணியில் செல்லும் தலைவர்களைப் பின் தொடர்ந்து அணிவகுத்து வந்தது.

''அஹிம்ஸா மூர்த்தி காந்திஜி.... ஜே''

''சத்தியசீலர் காந்திஜி... ஜே''

''ஒற்றுமை நிறுவிய சீலருக்கு... ஜே''

தொண்டர்களின் அணிகள் தொடர்ந்து நடந்து கொண்டே இருந்தன. முடிவையே காணவில்லை. ஜனங்கள் எல்லோரும் ஓவியத்தில் தீட்டப்பட்டவர்கள் போல் பொம்மைகளாய்ச் செயலற்று நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர்.

பவனி வந்து கொண்டிருந்த சுவாமி சிறிது அம்மையின் பக்கமாக முகத்தைத் திருப்பிப் புருவங்களை நெரித்து ''எப்படி?'' என்று பரதத்தில் வினவிச் சிரித்தார்.

சுவாமி என்ன கேட்கிறார் ?. தான் கேட்ட கேள்வி என்ன? 'திருடனே, திருடன் என்று கூவி நன்மக்கள் போர்வையில் மறைந்து கொள்ளுகிறானே, இது அடுக்குமா ?' என்பதுதானே? அதற்கு இந்தக் கூட்டத்தைக் காட்டிச் சிரிக்கிறாரே! ஆமாம், இவருடைய இந்தச் சிரிப்பு—சிரிப்பா சீற்றமா? அம்மைக்கே புரியவில்லை !



# பூச்சி பயலாஜி!

தி. ஜானகிராமன்

உங்களுக்குப் பிராணிபாஷை ஏன் தெரியவில்லை? கன்னிப் பெட்டியில் நேற்று நடந்ததைக் கேட்டிருந்தால், சினிமா, கூத்து, பஞ்சாயத்து பார்க்கு என்றெல்லாம் கிடந்து அலைய மாட்டீர்கள்.

புத்தகம் வைக்கிற பெரிய கன்னிப்பெட்டி. ராமபாணம் துளைத்த ஐதர்காலத்துப் புத்தகங்கள் முதல், நிலா யாத்திரைப் புத்தகம், மந்திரிகள் சண்டைக் கும்மிவரை ஆயிரத்துச் சொச்சம் புத்தகங்களை அதில்தான் போட்டு வைத்திருக்கிறேன். நேற்று மாலை ஏதோ புத்தகத்தைப் பிடுங்கிப் புரட்டுகையில் ஒரு சின்னத் தர்க்கம். பலகையில் ஓர் எறும்புச்சாரி. கரப்பு கூப்பிட்டதைக் கேட்டு ஓர் எறும்பு சாரியை விட்டு விலகி நின்றது.

''என்ன சமாசாரம்?''

''பொதுத் தொண்டு. எங்க ராஜாக் கரப்புக்கு அறுபது நாள் நிறைகிறது. விழாக் கொண்டாடணும்'' என்றது கரப்பு.

''என்ன பெரிய அதிசயம் இது, விழா எடுக்கும்படியா?'' என்று கேட்டது எறும்பு.

''அதிசயம் இல்லே. சாகசம்! உயிர் வாழ வேண்டும் என்ற உறுதி. உயிர்த் தத்துவத்தின் பிடிவாதம்.''

''புரியும்படியாகச் சொல்லணும்.''

''நீ என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா வாசிச்சதுண்டா?''

''இல்லே.''

''புக் அவ் நாலெட்ஜ்?''

''இல்லே.''

''பூச்சி இயல் நூல்?''

''எங்களை என்ன வேலை மெனக்கெட்டஜாதின்னு நெனைச்சியா, இப்படிப் புஸ்தகம் புஸ்தகம்னு அலையறதுக்கு? நாங்க என்ன கறையானு, ராமபாணமா, கரப்பா, மனுஷனு?''

''ஞானசூனியத்தைக் கௌரவமாச் சொல்லிக்கிறே-உன்னோட என்னத்தைப் பண்றது?''

''சரி, சமாசாரத்தைச் சொல்லு.''

''எங்க கரப்புக் குலம் உலகத்திலேயே ரொம்பப் பழைய குலம்னு இந்தப் புத்தகங்களில் எழுதியிருக்கு. பல கோடி வருஷங்களா நாங்க இந்தப் பூமியிலே இருக்கோமாம் — அதுவும் ஜாஸ்தி மாறுதலே இல்லாமல். உலகத்திலே நாங்க இல்லாத நாடே கிடையாது. பொட்டி, படுக்கை, மூட்டை, எங்கெங்கேயோ புகுந்து கப்பலேறி உலகம் முழுக்கப் பரவியிருக்கோம்.''

''அதாவது நாடுவிட்டு நாடு போய் வேறே இருக்கிறவங்க வயித்தெரிச்சலை யெல்லாம் கொட்டிங்கிறீங்கன்னு சொல்றே.''

''என்ன அப்படிச் சொல்லிட்டே?''

''பின்னே என்ன? நீங்க வாய் வச்ச பண்டம் எது உருப்படுது? நீங்க நடந்து போனாலே போதுமே, அங்கே ஒரு தனி வாடை, ஒரு தனி நாத்தம். புஸ்தகம் படிச்சுண்டிருக்காரே அந்த வழுக்கை மண்டை மனுஷன்—அவர் பெண்டாட்டியைக் கத்தற கத்தல் எனக்குத் தெரியும். 'என்னடீ காப்பி போடறே நீ? இப்படிக் கரப்புப் புழுக்கை நாத்தம் நாறுதே தினமும். டம்ளரையெல்லாம் அலமாரியிலே நிமித்தி வைக்

காதே. கவுத்து வையி கவுத்து வையின்னு நீ இந்த வீட்டுக்கு வந்த நாளாச் சொல்லிண்டிருக்கேன். கேக்கறியா? தண்ணி குடிக்கிறதுக்காக ஒரு டம்ளரை அலமாரிலேர்ந்து எடுத்தா அதிலே மீசையை ஆட்டிண்டு ஒரு கரப்பு. அரிசிப் பானையிலே கரப்பு. கடுகிலே கரப்பு, வெந்தியத்திலே கரப்பு. எதையும் மூடி வையி மூடிவையின்னு கத்தறேன். கேக்கலே மாட்டேங்கறே. இப்ப இந்தக் கரப்புப் புழுக்கை நாற்ற காப்பியை வேறே கொண்டு கொடுக்கறே. எப்படிக் குடிப்பேன்''னு பொழுது விடிஞ்சா காப்பிப் பாத்திரமும் கையுமா இவர் முகத்தைச் சுழிக்கிறார்; காப்பி இருக்கிற டம்ளர்னு யார் முகமும் மலர்ந்து போயிடும். உங்க கைங்கரியம் இவர் மூஞ்சி களிச்ச மணியமா உறைஞ்சு போயிருக்கு.''

''செப்பெறும்பு, கட்டெறும்பெல்லாம் கடிக்கும். நீ கறுப்பு எறும்பு, சாதுன்னு நெனச்சு வந்தா, பேச்சிலேயே இப்படி விஷமாக் கொட்டிப் பிடுங்கறியே!''

''வாஸ்தவம். உண்மையைச் சொல்றேன். விஷமாப் படறது உனக்கு.''

''கண்டதே காட்சி, கொண்டதே கோலம், முகர்றதே நாற்றம்னு இருக்கு உன் பேச்சு. வெள்ளைக்கார நாட்டிலே ஒரு பெரிய மனிதர் இருந்தார். அவருக்கு ஒரு பட்லர் சமைத்துப் போடுவான். ஒரு நாளைக்குக் காப்பி கொதிக்கிறபோது அதிலே ஒரு கரப்பும் சேர்ந்து கொதிச்சதை அவன் கவனிக்கவில்லை. வடிகட்டும்போதுதான் கவனித்தான். பரவாயில்லைன்னு அப்படியே கரப்பை எறிந்துவிட்டு, பாலைக் கலந்து சர்க்கரை போட்டுக் கொண்டு கொடுத்தான். அவர் சாப்பிட்டார். கொஞ்சம் என்னவோபோல் இருந்தது. அவர் சாப்பாட்டு ராமன் இல்லை. சரிதான் என்று குடித்து விட்டார். பதினஞ்சு நிமிஷம் கழித்து ''இன்னிக்கு என்ன மாயம் செய்தே? காப்பி சாப்பிட்ட உடனே ஈளை இழுப்பு, இருமல் எல்லாம் அப்படி அடங்கிப் போயிடுத்தே'' என்று பட்லரை ஆச்சரியம் தாங்காமல் கேட்டார். அவர் ஆஸ்துமாப் பேர்வழி. கடுமையான ஆஸ்துமா. அன்னிலேந்து அவன் தினமும் அப்படியே காப்பி போட்டுக் கொடுத்தான். ஹோமியோபதி டாக்டர் ஒருத்தருக்கு அது அப்புறம் தெரிஞ்சுது. ப்ளாட்டான்னு ஒரு மருந்தே பண்ணிவிட்டார் அவர். அதுக்கு நாங்கதான் தாய்ச் சரக்கு. இதுக்கு என்ன சொல்றே?''

''உலகத்திலே எல்லாரும் ஈ எறும்பு முதல் ஆஸ்துமாக்காரங்களா இருக்கணும். கரப்பின் புகழ் ஓங்கணும். வேறே என்ன சொல்லணும்?''

''நாத்தம் புடிச்ச சாதின்னு சொன்னே. எங்களாலேயும் நல்லது உண்டுன்னு சொன்னேன். அதுவும் உனக்கு எரிச்சலா இருக்கா?''

''எரிச்சல் இல்லை. அதுவும் பிள்ளையார் எறும்புக்கு எரிச்சல் என்ன வேண்டிக் கிடக்கு! உலகத்திலே எந்த இடத்திலேதான் நல்லது இல்லே. மனுஷனுலே கூட இப்ப நல்லது ஏற்படறது. அவன் கண்ணு இருதயம் எல்லாம் கூட இப்ப இன்னொரு மனுஷனுக்கு உபயோகப்படறதாம். எங்களைக் கூடப் போட்டுச் சீனுக்காரங்கள்ளாம் மருந்து பண்ணுவாங்களாம். அது சரி, சட்டுனு சேதியைச் சொல்லு. உங்க கரப்பு ராஜாவுக்கு எதுக்காக அறுபது நாள் நிறைவு விழாக் கொண்டாடணும்?''

''அதைத்தான் சொல்ல வந்தேன். நீ பேச்சை எங்கேயோ கொண்டு போனே. எங்களுக்குக் கடவுள் விதிச்ச ஆயுசு நாறாறு நாள் ஐந்நூறு நாள் இப்படி. தீர்க்காயுசு. ஆனா இப்பல்லாம் சிலசமயம் அலமாரிப் பக்கம் போக முடியலே. என்னமோ வெள்ளையா இருக்குது. அதைச் சாப்பிட்டு முடிக்கிறதுக்குள்ளே ஒரு கூட்டமா நாங்க செத்துப் போயிடறோம். சாப்பிடாம இருக்கலாம்னாலும் பசி கேக்கலே.''

''அகரப் பசி. பூட்சு, பேப்பர், அழுக்கு, எதையும் திங்கற பசி.''

''சொல்லிக்கோ. சாப்பிடாம இருந்தாலும் என்னமோ 'பிஸ் பிஸ்'னு பீச்சறாங்க. உடனே பொத்து பொத்துனு மரணம். கூட்டம் கூட்டமாச் சாகிறோம். இப்பல்லாம் ஒரு கரப்புக்கூட இருபது நாள் முழுசா இருக்கிறதில்லை. அப்படி ஒரு மகத்தான நாசகார எதிரியா மாறிட்டான் மனுஷன்.''

''எல்லா மனுஷன்களையும் அப்படிச் சொல்லாதே. நீ எங்கேந்து வரே?''

''அடுத்த வீட்டிலேர்ந்து.''

''அப்படிச் சொல்லு. அங்க குடியிருக்கிறவன் சண்டைக்காரன். இந்த வழுக்கை மண்டையின் பெண்சாதி பழைய காலத்து பொம்பிளை. லீவிலே ஒரு மாசம் ஊருக்குப் போயிட்டு முந்தாநாள் திரும்பி வந்தார்கள். சமையல் அறைக் கதவைத் திறந்தா ஓராயிரம் கரப்பு. ஒரே நாத்தம். ஒரு விளக்குமாத்துக் கட்டையை எடுத்து அப்படியே அடிச்சுக் கொல்ல ஆரம்பிச்சார் வழுக்கை. உடனே அந்த அம்மா ஓடிவந்து கையிலே இருக்கிற துடைப்பக் கட்டையைப் பிடுங்கி, ''என்ன காரியம் இது! மகா பாவம்! கரப்பு லக்ஷ்மிக்குச் சமானம். இப்படி அடிச்சுக் கொலை பண்ணினா வீட்டிலே லக்ஷ்மியே தங்கமாட்டா'' அப்படீன்னு பயமுறுத்தினா. கரப்புக்களையும் பயமுறுத்தி வெரட்டினா. உத்தரம், சுவர், சாக்கடை, புழக்கடை— எல்லாம் ஓடிப் பிழைச்சுது.''

''அப்படியா! என்ன ஆச்சரியம்! சீதாப் பிராட்டி மாதிரி அத்தனை கருணையுள்ள தாயாரா அந்த அம்மா!''

''ஆனா வழுக்கை மண்டை கரம் கட்டிண்டிருக்கு. 'தினம் தினந்தான் இந்த லக்ஷ்மி நாத்தத்தைக் காப்பியிலே போட்டுக் கொடுக்கிறியே, இந்த அபாயம் வேறயா? கொண்டா இப்படித் துடைப்பக் கட்டையை'ன்னு பிடுங்கப் போனார். அந்த அம்மா மசியலே. ஊரிலேருந்து வந்தவுடனே சண்டை வாண்டாம்னு - விலகிவிட்டனர் இருவரும். அந்த அம்மா ஒரு நாளைக்குக் கோயில், கடைன்னு போயிருந்த சமயம் பார்த்து, மருந்து வச்சு உங்களையெல்லாம் தீர்த்துக் கட்டத்தான் போறார்.''

''ம்.....''

''என்ன பெருமூச்சுவிடறே?''

"நீ சொல்றதும் என் கட்சிக்குத்தானே பலம்னு அப்பாடான்னு பெருமூச்சு விட்டேன். எங்கே போனாலும் இத்தனை ஆபத்து நெறஞ்சு கெடக்கு. இத்தனையையும் மீறி எங்க ராஜாக் கரப்பு அறுபது நாள் உயிர் வாழ்ந்து விட்டார்னா, அது அவருடைய மகத்தான சக்தியை, உயிர் வாழறதிலே அவருக்கு இருக்கிற திட நம்பிக்கையை, விருப்பத்தைத் தானே காட்டறது? கரப்பு ஜாதிக்கே ஒரு தனி லட்சிய புருஷனா அவர் விளங்கறது எங்களைப் போன்ற இளைஞர்களுக்கு ஒரு தனி ஊக்கத்தை, பிரமிப்பை உண்டு பண்ணுகிறது. அதுக்காக ஒரு விழா எடுத்து அவருக்கு எங்களாலான தானிய முடிப்பு, ஒரு பருக்கை முடிப்பு அல்லது ஒரு நொய் முடிப்பாவது தரலாம்னு புறப்பட்டேன்."

"உனக்கென்ன வயசு?" என்று கேட்டது எறும்பு.

"இருபத்தாறு நாள்."

"நீ இருபத்தாறு நாளாவது உசிரோட இருந்தாச்சு. எங்க பாடு அப்படி இல்லையே. தப்பித் தவறி இந்த வழுக்கை மண்டை கால்மேலேஊர்ந்தாலே போதும். கடிக்கக் கூட வாண்டாம். அப்படியே சொரியறப்பல ஒரு தடவை 'அந்த இடத்தைத் தேய்ச்ச என்னை நசுக்கிவிடுவார். எப்ப, எந்த ஆபத்து எங்கே காத்திருக்குன்னு சொல்ல முடியாத ஜன்மம் எங்க ஜன்மம். நீயானா அறுபது நாள் போதாதுன்னு குறைப்படறே."

"கடவுள் எங்களுக்கு விதிச்ச ஆயுசுலே கால்வாசி வாழ ஆசைப்படுவது கூடவா பேராசை! உங்க உடம்புக்குத் தகுந்தது உங்க ஆயுசு. எங்க உடம்புக்குத் தகுந்தது எங்க ஆயுசு."

"எதுவாயிருந்தாலும் சரி. அந்த ஆயுசு முழுக்க வாழணும்னு ஆசைப்படறது தப்பு தான்."

"என்னது!" என்று கேட்ட கரப்பின் மீசை விதிர்த்து நின்றது.

"ஆமாம்."

"ஆனானப்பட்ட மனுஷக் கிழவங்களே கிடந்து அல்லாடறாங்க! நமக்கு மட்டும் ஏன் இந்த ஆசை?"

"மனுஷனுக்கு என்ன கேடு வந்தது இப்ப? கரப்பு, கொசு, ஈன்னு இருக்கிறதெல்லாத்தையும் கொலை பண்ணிட்டு அவன்தானே பூமியிலே சாச்வதமா, தீர்க்காயுசா இருக்கணும்னு கச்சை கட்டிக்கிட்டிருக்கான்?"



"ரொம்பச் சரி. நம்மையெல்லாம் அவன் கொலை பண்ண ஆரம்பிச்சு இப்ப அவன் தலையிலே வந்து விடிஞ்சிருக்கு எல்லாம்."

"என்ன, சொல்லு! சொல்லு!"

"என்ஸைக்ளோபீடியாவெல்லாம் படிச்சிருக்கேன்னு சொல்றே. என்கிட்ட கேட்கறியே."

"அட சொல்லுப்பா."

"இந்த வழுக்கை மண்டை மனுஷன் இருக்கான் பாரு, இவனுக்கு அம்பத்தெட்டு வயசாகப் போறது. ஏதோ ஆபீசிலே வேலை. பெரிய வேலை. இந்தக் கிழவன் மாரடைப்பு வந்து போக மாட்டானான்னு கீழே இருக்கிற இளவட்டங்கள்ளாம் துடிக்கிறதுகள். உலகத்திலே இளவட்ட மனுஷங்களா இப்ப மண்டிக்கிடக்கு. அதுகளுக்கெல்லாம் இஷ்டப்படி ஒண்ணும் பண்ண முடியல்லே. இந்த வயசானதுங்கள்ளாம் ஒழிஞ்சாத்தான் நாம ஜாலியா இருக்க முடியும்னு எல்லாம் தவிக்கிறது. நேத்து இந்த வழுக்கை மண்டைகிட்ட வந்து ஓர் இளவட்டம் பேசித்தாம்: 'அம்பது வயசு ஆனவுடனே வேலையை விட்டு ஓய்வு கொடுத்திடணும் சார், இல்லாட்டி கீழே இருக்கிறவங்கள்ளாம் எப்படித் தான் மேலே வர்றது'ன்னு சொன்னானாம். 'ஏன் அதோட நிறுத்திவிட்டே. அம்பது வயசானவுடனே ரீடயராகச் சொல்லி, அப்படியே வீட்டுக்குப் போகாமே மின்சார அதிர்ச்சி கொடுத்துப் பரலோகத்துக்கு அனுப்பிவெச்சிடணும்னு சொல்லேன்' என்று சொல்லித்தாம் இந்த வழுக்கை மண்டை. சம்சாரத்துக்கிட்ட வந்து புலம்பிண்டே இருந்தது. 'நான் வயித்தை ஒடுக்கி, வாயை ஒடுக்கிக் கிழிசல், கந்தல் எல்லாம் தைச்சுப் போட்டுண்டு சம்பாதிச்சு, என் பிள்ளைகளை வளர்க்கணும், சோறு போடணும், படிக்க வைக்கணும் — ஆனா அவங்க கல்லை விட்டு எறிஞ்சிண்டு, டெரிலின் சட்டை போட்டுண்டு, பள்ளிக்கூடம், பஸ்ஸுன்னு போற இடமெல்லாம் சண்டை போடணும். இதுக்கெல்லாம் பணம் அனுப்பிச்சுண்டு, அப்புறம் தானும் அம்பது வயசிலே வேலையை விட்டு வீட்டுக்குப் போயிடணுமாம். இது என்னடா உலகம்'ன்னு ரொம்ப எரிச்சலா இரைச்சல் போட்டுது."

"நல்லா வேணும்."

"என்ன வேணும்! அப்படின்னா உங்க கரப்பு ராஜாவுக்கு அறுபது நாள் கொண்டாட்டம் எதுக்கு?"


எங்கள் பலம் எஃகும்,
மக்களுமே. மனிதன் வெறும்
உணவினால் மட்டுமே உயிர்
வாழ்வதில்லை. ஆதலால்
நாங்கள் ஜாம்ஷெட்பூரில் இசை,
நடனம் மற்றும் மனிதனுடைய
உணர்ச்சிகளை வெளிப்படுத்தும்
இதர கலைகளையும் பேணி
வளர்த்து வருகிறோம்.
டாடா ஸ்டீல்

''என்ன அடிமடியிலே கைபோடறே? மனுஷன் நல்லாத் தவிக்கட்டும்னு நான் சொன்னு, எங்க ராஜாவும் தவிக்கணும்னு சொல்றேன்னு நெனச்சியா? நாங்களும் நன்னி கெட்ட குலம்னு நெனச்சியா?''

''நான் இத்தனே சொன்னப்புறமும் அதையே சொல்றே. கொக்குக்குத்தான் ஒரே மதின்னு சொல்ற வழக்கம்.''

''நீ சொல்றது புரியறது. அதுக்காக அறுபது நாளான எங்க ராஜாவை விட்டுட முடியுமா? அவரு எத்தனே அடிபட்டவரு! எத்தனே அனுபவம்! என்ன நெளிவு சுளுவு! அவர் கிட்டே யிருந்து எத்தனே தெரிஞ்சுக்க வேண்டியிருக்கு! அவருக்கு விழாக் கொண்டாடித்தான் ஆகணும். நீ ஒண்ணும் அதிகமாச் செய்யவாணும். உங்க சாரி கிட்டச் சொல்லி, ஆளுக்கு ஒரு நொய்யி நன்கொடையாக் கொடுத்தால் போதும். இதைக் கேக்கறதுக்குத்தான் உன்னேக் கூப்பிட்டேன். அவருக்கு நாங்க இதைச் செய்துதான் ஆகணும். அவர் எங்களேக் கண்ணுக்குக் கண்ணு வச்சிருக்கார். பேச்சுக்குப் பேச்சு ''நீங்கதான் இந்தக் கரப்பு ராஜ்யத்துக்கே ஆதாரம்னு சொல்லிக்கிட்டே இருக்கார்.''

''அப்படி உங்களுக்கு ஒரு பருக்கை போட்டாத்தானே நீங்களும் பெரிய பருக்கை முடிப்புக் கொடுக்கணும்னு அலேயக் கிளம்புவீங்க.''

''சும்மா இப்படிக் கிண்டல் பண்ணுதே. நீங்க கொடுக்கப் போறீங்களா இல்லேயா?''

''பார்க்கலாம். நான் எங்க இளவட்டங்க கிட்டச் சொல்லிக் கலந்து ஆலோசிச்சுத்தான் செய்யணும். அறுபது நாளாச்சே, உங்க ராஜா ஏதாவது புதுசா உங்களுக்குச் சொல்லிக் கொடுத்திருக்காரா?''

''புதுசான்னு?''

''உதாரணமா, உங்களுக்குக் குருவி, காக்கா, பட்டாம்பூச்சி, தேனீ — இந்த மாதிரி ரொம்ப தூரம் பறக்கத் தெரியணும். உயரக்கப் பறக்கத் தெரியணும். இப்படி நாற்காலியிலேருந்து மேஜை, மேஜையிலேயிருந்து கள்ளிப் பெட்டி, அகப்பைக் கூடு, உரிமட்டை நார் மூட்டை — இப்படித் தத்திக்கிட்டே இருந்தாப் போதாது. இல்லாட்டி உங்க ராஜாவுக்கு அறுபது நான் கொண்டாட்டமும் நடக்காது. உன்னுடை இருபத்தாறையும் காப்பாத்திக்க முடியாது.''

''நான் என்னமோ சொன்னு, சம்பந்தமில்லாம ஏதோ சொல்லிக்கிட்டே யிருக்கியே.''

''சம்பந்தத்தோடதான் சொல்றேன்.'' அதோ பாரு, அந்த மூலேயிலே.''

''எங்கே?''

''அதோ — பெட்டியோட அந்த மூலேயிலே. தெரியலியா, அதோ பல்லி நிக்கிறது.

''பல்லியா! எங்கே? எங்கே?'' என்று பரபரத்தது கரப்பு. மீசை துடித்தது.

''அதோ — அது ரொம்ப நேரமா உன்னேயே பார்த்துக்கிட்டிருக்கு. கிட்டக்க வரக் கிளம்பிட்டுது. இனிமே நீ ஓடித் தப்பிக்க முடியாது. புத்திதான் இல்லே. இறக்கையாவது இருக்கு. சட்டுனு அதை உபயோகப்படுத்து. பறந்து தொலே.''

''சரி, சரி, நான் உன்னே நாளேக்குச் சந்திக்கிறேன்.''

ப்ரப்ரபர்ர்ர்ர்ர்ர்ர்.....

கரப்பு பறந்து என் பிடரியில் இறங்கி, பனியனுக்குள் புகுந்தது. நான் எழுந்து குதித்தேன். பனியனேக் கழற்றி உதறினேன். கரப்பு விழுந்து கட்டிலுக்கடியில் ஓடிற்று.

''என்ன, என்ன?'' என்று ஓடிவந்தாள் சம்சாரம்.

''கட்டிலுக்கடியிலெல்லாம் லக்ஷ்மி''என்று கத்தினேன்.

---

# கழுதைகளுக்கும் கிராக்கி!

வீட்டில் நாய்களேயும் பூனைகளேயும் பலர் அன்போடு வளர்க்கிறார்கள். மேலைநாடுகளில் குறிப்பாக மேற்கு ஜெர்மனி வீடுகளில் பிராணிகளேயும் பறவைகளேயும் வளர்க்க ஓர் இயக்கமே தோன்றியுள்ளது. புதிதாக ஒரு வீட்டுக்குக் குடித்தனம் போகிறவர்களிடம் பிராணிகள், பறவைகள் எதையும் வளர்க்கக்கூடாது என்று ஒப்பந்தப் பத்திரத்தில் ஒரு ஷரத்துப் போட்டுக் கையெழுத்து வாங்கிக்கொள்கின்றனர். வீட்டுக்காரர்களின் இத்தடையையும் மீறிப் பிராணி வளர்ப்பில் மக்களுக்கு உள்ள ஆர்வம் வளர்ந்து வருகிறது. ஈஸ்டர் பண்டிகையின்போது குழந்தைகளுக்குப் பல்வேறு பறவைகளும், வீட்டு விலங்குகளும் விதம்விதமான வண்ண மீன்களும் பரிசுப் பொருள்களாக வழங்கப்படுகின்றனவாம்! ஈஸ்டர் பண்டிகையின்போது மேற்கு ஜெர்மனியின் பெரு நகரங்களில் உள்ள பல கடைகள் 'பிராணிகள், பறவைகள் அனைத்தும் விற்றுவிட்டன; கைவசம் ஸ்டாக் எதுவுமில்லே' என்று அறிவிப்புகள் செய்யும் அளவுக்கு ஆர்டர்கள் வந்து குவிகின்றன. ஒரு யானைக்குட்டி 8,000 மார்க் முதல் 12,000 மார்க் வரை விலை போகிறது. இருந்தும் அவைகளுக்குக் கிராக்கி அதிகம் என்று அறிவிக்கிறார் மேற்கு ஜெர்மன் வியாபாரி ஒருவர்.

வீட்டில் பிராணிகளேயும் பறவைகளேயும் வளர்ப்பதன் மூலம் குழந்தைகள், பிராணிகளிடம் அன்பு செலுத்தும் பண்பினைப் பெறுகின்றனர். மூன்று, நான்கு வயதுச் சிறுவர்களுக்கு நாயும் பூனையும் உகந்த தோழர்கள் அன்று. ஆமைதான் அவர்களுக்கு உற்ற தோழன். குழந்தைகள் அடித்தாலும் உதைத்தாலும் ஆமைகள் பதிலுக்குக் குழந்தைகளேச் சீண்டுவதில்லே. அதன் உறுதியான உடலமைப்பு அடி உதைகளேத் தாங்கிக் கொள்ளும் வண்ணம் அமைந்துள்ளது. குழந்தைகளின் வயதுக்கேற்ப உரிய பிராணிகளேப் பரிசளிக்கப் பெற்றோர்களுக்கு ஆலோசனைகள் வழங்குகின்றனர் கல்வித் துறையினர். பரிசுப் பொருள்களில் மற்ற பிராணிகள் பறவைகளேப் போலவே கழுதைகளும் மிகுதியாக இடம் பெறுகின்றனவாம்.

வி. எஸ். ஸங்டன்கர்
தமிழாக்கம்:-'பாணன்'




[சமூகத்துக்குப் பயன்படும் வகையில் சுருக்கமாகவும் தெளிவாகவும் எழுதப்படும் வட்ட மேஜைக் கடிதங்களை வரவேற்கப்படுகின்றன. சிந்தனையைத் தூண்டும் சிறந்த கடிதம் ஒன்றுக்கு வாரா வாரம் பதினைந்து ரூபாய் பரிசு வழங்கத் தீர்மானித்துள்ளோம். இந்த வாரம் பெங்களூர் ஸ்ரீ எஸ். நடராஜன் பரிசு பெறுகிறார். — ஆசிரியர்]

சமீபத்தில் நடைபெற்ற மேற்கு ஜெர்மன் தேர்தல் பற்றிய விஷயங்களை அயல்நாட்டு விஷயங்களில் அக்கறையுள்ளவர்கள் கவனித்திருப்பார்கள். இந்தியாபோன்று அங்கு பல கட்சிகள் இல்லை. மூன்று கட்சிகள்தான் இருக்கின்றன. அது எப்படி சாத்தியமாயிற்று? குறிப்பிட்ட சதவிகிதத்துக்கு அதிகமாக வோட்டுக்கள் பெறும் கட்சிகள் சார்பாக நிற்கும் வேட்பாளர் மட்டுமே வெற்றி பெறும் வாய்ப்பு. இந்தியாவில் ஏன் அப்படி ஒரு முறையைக் கையாளக் கூடாது? பிரதேச மனப்பான்மை, மொழி வெறி, இன வெறி, பண பலம், அதிகார பலம், பதவி வெறி காரணமாகத் தனித்து நிற்கும் கட்சிகளும் சரி, தனி நபர்களும் சரி அரசியல் வானிலிருந்து அஸ்தமிக்க நேரும். இதனைப் பொது மக்கள் வரவேற்கவும் செய்வர். தேச பக்தர்களும் இந்தியா ஒரே நாடாக இருக்க வேண்டும் என்று விரும்புபவர்களும் சிந்திக்க வேண்டியது அவசியம்.

கணியூர்
30-9-69 ரா. சுப்பிரமணியம்

காஞ்சிபுரத்துக்குச் சுற்றுலா வருபவர்களுக்கு ஒரு நற்செய்தி. அரிமா சங்கத்தின் சார்பில் ''காஞ்சி ஆலயங்கள்'' என்ற புத்தகம் வெளியிடப்பட்டுள்ளது. மக்களுக்கு இது அன்பளிப்பாக வழங்கப்படுகிறது. காஞ்சி காமகோடி பீடாதிபதி இந்நூலுக்கு ஸ்ரீமுகம் வழங்கியுள்ளார். காஞ்சியில் ஆலயங்களைப் பார்க்க வரும் மக்கள் இதனைப் பெற்றுப் பயன் பெறலாம்.

புத்தகம் கிடைக்கும் இடம்: அரிமா சங்கம், காஞ்சிபுரம்.

காஞ்சிபுரம்
7-10-69 ச.கா. பத்மநாபன்

நாட்டில் எவ்வளவோ சேனைகள் இன்று முளைத்து விட்டன. அவற்றின் பலா பலன்களும் நமக்குத் தெரிந்ததுதான். இந்தச் சமயத்தில் ஒரு புதுமையான படை எங்கள் (புதுவை) மாநிலத்தில் தோன்றியிருக்கிறது. அதுதான் பெற்றோர் படை. ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? ஒவ்வொரு கல்லூரிக்கும் ஒவ்வொரு பெற்றோர் படை இருக்கும். பெற்றோர் படையின் முக்கிய செயல் திட்டங்கள் என்ன தெரியுமா? கல்லூரியில் மாணவர்களின் ஸ்டிரைக்கைத் தவிர்ப்பது. ஸ்ட்ரைக்கால் பாதிக்கப்பட்ட மாணவர்களைக் கல்லூரிக்குள் அழைத்துப் போவது. மாணவர்களுக்கு அறிவுரை வழங்குவது. ஸ்டிரைக்கின்போது ஆசிரியர்கட்கும், கல்லூரிக்கும் போதிய பாதுகாப்பு அளிப்பது போன்றவையாகும். பெற்றோர் படை தனது திட்டங்களில் வெற்றி பெறுவது சாத்தியமே. அவர்கட்குத் தங்கள் பிள்ளைகளைச் சமயோசிதமாக எப்படி வழி நடத்துவது என்று தெரியாமலா போகும்? இதுபோல் பெற்றோர் படையை ஏனைய மாநிலங்களிலும் ஏன் அமைக்கக் கூடாது?

காரைக்கால்
12-10-69 இ. நாகராஜன்

பெங்களூர் தலைமைத் தபால் நிலையம் காந்தி நூற்றாண்டு தபால் தலைகள் வெளியிட்ட சில நிமிஷங்களுக்குள் விசேஷ தபால் தலை அடங்கிய கவர் ஒன்று (30 பைசா) ஒரு ரூபாய்க்கு விற்கப்பட்டது. அதாவது தபால் அதிகாரிகள் கண் முன்னாலேயே. மற்ற தபால் தலைகளும் இதே போல் கறுப்பு மார்க்கெட்டில் விற்கப்பட்டன. பல மணி நேரங்கள் கியூவில் நிற்கப் பயந்து பலர் அதிக விலை கொடுத்து வாங்கினர். இதே கதிதான் காந்தி நாணயங்கள், நோட்டுக்களுக்கும். சிறிதும் நாணயமில்லாமல் அதிக விலைக்கு விற்கப்பட்டன. இதுவா நாம் அண்ணலுக்குச் செலுத்தும் அஞ்சலி! நேர்மைக்கும், சத்தியத்துக்கும் போராடிய உத்தமருக்கு இப்படியா அஞ்சலி செலுத்த வேண்டும்?

பெங்களூர்
12-10-69 எஸ். நடராஜன்

உத்தியோகத்திலிருப்பவர்களுக்கு அவர்களது சம்பளத்திலேயே பிடித்துக் கொள்ளும்படியாக உள்ள 'சம்பள சேமிப்பு இன்ஷ்யூரன்ஸ்' திட்டத்தின் கீழ் பிடிக்கப்படும் பணம், போய்ச் சேர்ந்ததற்கான எந்த ரசீதும் பாலிசிதாரருக்கு இது வரை வழங்கப்பட்டதில்லை. இதனால் அதிருப்தியடைந்து பலர் தம்மைச் சம்பள சேமிப்பு இன்ஷ்யூரன்ஸிலிருந்து விடுவித்துக் கொள்கின்றனர். ஆதலால் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் உடனுக்குடன் ரசீது வழங்க வேண்டும்.

பரிவில்லிக்கோட்டை
8-10-69 அ. பட்டிராஜன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# காலைப் புத்துணர்ச்சியை
# மாலை வரை
# நீடிக்கச்
# செய்யுங்கள்!

காலையில் குளித்தபின் பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்கை உடலில் தூவிக் கொண்டால் புத்துணர்ச்சி மணிக்கணக்கில் நீடித்திருக்கும். வியர்வையை விரைவில் உறிஞ்சும் தன்மையுடைய பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க் கடுங்கோடையில் கூட உங்களை இதமான உணர்ச்சியுடனும் உல்லாசத்துடனும் இருக்கச்செய்யும். உங்கள் உடலைத்தழுவி நிற்கும் ட்ரீம்ஃப்ளவர் நறுமணம் உங்களைச் சூழ்ந்துள்ளவர்களை மகிழவைக்கும். எல்லா காலநிலைகளுக்கும் ஏற்றதாகையால் வருடம் பூராவும் தினமும் உபயோகிக்கச் சிறந்தது பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்க்!




## பாண்ட்ஸ்

ட்ரீம்ஃப்ளவர் டால்க்—
மென்மை மிக்க மகோன்னத டால்க்!

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன்
யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பட்டது)

